உ





# தாயுமான மகான்

## அனுபவங்கள்

பிரம்மஸ்ரீ

E.S.வேதபுரி சாஸ்திரிகள்

ஸ்ரீஸ்ரீஸ்ரீ மஹாபெரியவாளின்

பரிபூர்ண அனுக்ரஹத்துடன்

தொகுத்தவர்

திருமதி.ரேவதிகுமார்

செல் : 9789082269

Rs. 50/-



ஸ்ரீ மகாபெரியவாளுடன் பிரம்மஸ்ரீ வேதபுரி சாஸ்திரிகள்

உ

ஸ்ரீ கணபதியே துணை

ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா துணை

என் எட்டு வயதிலிருந்து என்னை வளர்த்த ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவாளிடம் நான் கற்றுக் கொண்ட பாடம், என்னை ஸ்ரீ மகாபெரியவா வளர்த்தவிதம் எனக்கு அமைத்துக் கொடுத்த வாழ்க்கை எல்லாவற்றையும் ஒரு நூலில் எழுதிவைக்க ரொம்ப நாளாக ஆசை. மகானிடம் இருந்து அவரது கருணையால் பெற்ற பேற்றினையும் எழுதிவைக்க வேண்டும் என்ற உந்துதல் இந்த வருட ஸ்ரீஸ்ரீஸ்ரீமகாபெரியவாளின் 118 வருட ஜெயந்தியின் போது நிறைவேறியது. நான் சொல்ல அதை அப்படியே எழுதியவர் திருமதி. ரேவதி குமார் என்பவர் இவரும் ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவாளின் பரமபக்தை. இதை படிக்கும் போது ஸ்ரீஸ்ரீஸ்ரீமகாபெரியவாள் கடவுள் மட்டும் இல்லை. தாய், தந்தை, குரு, தெய்வம் என்பதை எல்லோர் நெஞ்சிலும், மனதிலும் நிறைய வேண்டும் என்று உளமாரப் பிரார்த்திக்கிறேன்.

– பிரம்மஸ்ரீ E.S.வேதபுரி சாஸ்திரிகள்.

# தாயுமான மகான்

"ச்ருதி ஸ்மிருத்தி புராணானாம் ஆலயம் கருணாலயம்
நமாமி பகவத் பாத சங்கரம் லோக சங்கரம்"

ப்ரம்மஸ்ரீ வேதபுரிசாஸ்திரிகள் ஸ்ரீஸ்ரீஸ்ரீமகாபெரியவாளிடம் கண்ட அனுபவம்.

எசையனூர் வட ஆற்காடு ஜில்லாவில் ஸ்ரீமதி.ராஜலக்ஷ்மி, திரு.சீதாராம அய்யருக்கு இரண்டாவது குழந்தையாக பிறந்தவர். ப்ரம்மஸ்ரீ வேதபுரி சாஸ்திரிகள்.

ஒரு முறை ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா எசையனூருக்கு சாதுர்மாஸ்ய பூஜை சமயத்தில் வந்திருந்தார். அந்த ஊரில் கோகிலா அம்மாள் என்பவர் ஸ்ரீ மகாபெரியவாளின் பக்தை. அவர் சங்கரஜெயந்தி, வியாசர்பூஜை நவராத்திரி போன்ற எல்லா பண்டிகைகளையும் விமரிசையாக கொண்டாடுவார். அவரிடம் என் அப்பா வேலை பார்த்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ மகாபெரியவா வந்திருந்த சமயம் கோகிலா அம்மாள் என்னை கூப்பிட்டு (அப்போது எனக்கு 8 இல்லை 9 வயது இருக்கும் நினைவில்லை) பல் தேய்த்து விபூதி இட்டுக்கொண்டு தினம் வயலில் இருக்கும் புஷ்பங்களை கொண்டுவந்து ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவாளிடம் வைத்து நமஸ்காரம் செய்யசொன்னார். இதை தினமும் கவனித்துக் கொண்டிருந்தார். ஸ்ரீ மகா பெரியவா ஒருநாள் ஸ்ரீ மகாபெரியவா திருபுரசுந்தரி சமேத

ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் பூஜை முடிந்தவுடன் சுவாமி தீர்த்தம் எல்லோருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தார். நானும் தீர்த்தம் வாங்கச் சென்றேன். ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் தீர்த்தம் கொடுத்துவிட்டு **"இங்கேயே ஓரத்தில் நில்"** என்று சொன்னார். நான் பயந்துவிட்டேன். என்ன தப்பு செய்தோம் என்று புரியவில்லையே என்று ரொம்பவும் பயந்தேன். அப்போது "ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் அருளும் அன்பும் கலந்த குரலில் பயப்படாதே உன்னிடம் பேசவேண்டும்" என்றார். எல்லா பக்தர்களுக்கும் தீர்த்தம் கொடுத்து முடித்தபின் என்னிடம் "தினம் புஷ்பங்கள் நீயாக கொண்டுவந்து தரயா? யாராவது சொல்லி செய்கிறாயா?" என்று கேட்டார். கோகிலா பாட்டி என்னிடம் தினம் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு செய் என்று சொன்னார் நான் செய்கிறேன் என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா "ஏன்? உனக்கே தெரியாதா? சொல்லித்தான் செய்வியா? என்று கேட்டார் பெரியவா (பாட்டி) சொல்லிக் கொடுத்தா எனக்குத் தெரியும் என்றேன். நான் சின்னக் குழந்தை ஒன்றும் தெரியாது சொல்லிகொடுத்தா செய்வேன் என்று சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா சிரித்துக் கொண்டே **"எனக்கு உன்னை பிடித்திருக்கு என்னுடன் வரயா? என்ன சம்பளம் வேண்டும்?"** என்றார். நான் ஸ்ரீ பெரியவா என்ன கொடுக்கிறாரோ வாங்கி கொள்கிறேன் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா சிரித்துக் கொண்டார். நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் என் சிறுவயதிலேயே என் தாயார் காலமாகிவிட்டார். அப்பாதான் என்னை வளத்துண்டு இருக்கார் என்று சொன்னேன். அப்பா "சரி" என்று சொன்னால் உங்களுடன் வருகிறேன் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா "உன் அப்பாவிற்கு எத்தனை குழந்தைகள்"? என்றார். நான், ஒரு அக்கா, இரண்டு தம்பிகள், ஒரு தம்பி காலமாகிவிட்டான் என்றேன். என் அக்காவிற்கு கல்யாணம் ஆகி புக்காத்தில் இருக்கா என்றேன். அப்போது ஸ்ரீ மகாபெரியவா அண்ணன், தம்பி உங்கள் இருவரில் ஒருத்தர் உன் அப்பாவை பார்த்துக்கட்டும் **"நீ என்னோட வா"** என்றார் வியாசர் (சாதுர்மாஸ்ய) பூஜை முடியும் வரை எதுவும் சொல்லவில்லை. பாட்டி என்னை கூப்பிட்டு ஸ்ரீ பெரியவா என்ன பேசினா? சொல்லு என்றார். என் கூட வரயானு? கேட்டா. என்ன

சம்பளம் வேணும்?னு கேட்டா நான் பெரியவா என்ன கொடுக்கறேளோ வாங்கிக்கறேனு சொன்னேன் என்றேன். பாட்டி என்னை கோபித்துக் கொண்டு ஸ்ரீ பெரியவாளிடம் சம்பளம் வாங்கக்கூடாது, அவருடைய கடாக்ஷம் உங்கள் குடும்பத்தை காப்பாற்றும் என்றார். சில நாட்களுக்குப் பிறகு வழக்கம்போல பூஜைக்கு சென்றபோது ஸ்ரீ மகாபெரியவா "என்ன சம்பளம் வேணும்?" என்றார் எனக்கு ஸ்ரீ மகாபெரியவாளோடு அனுக்கிரஹம் போதும் என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா என்ன பணக்காரப்பாட்டி சொன்னாளா? என்றார். நான் ஆமாம் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா சிரித்துக் கொண்டார். பூஜை முடிந்து ஸ்ரீ மகாபெரியவா ஊரைவிட்டு கிளம்பினார்கள். எங்கள் ஆத்து வாசலில் ஸ்ரீ மகாபெரியவாளின் பல்லக்கு நின்றது. நாங்கள் எல்லோரும் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு நமஸ்காரம் செய்தோம். அப்போது ஸ்ரீ மகாபெரியவா **"அன்னிக்கு என்னோட வரேன்னையே" வரயா?"** என்றார் அன்பான குரலில்.

நானும் உடனே வரேன் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா கோகிலாபாட்டியிடம் இந்தக் குழந்தையை அழைத்துக் கொள்ளட்டுமா? என்று கேட்டார். பாட்டி ஸ்ரீ மகாபெரியவாளிடம் இந்தக் குழந்தை தாயில்லாக் குழந்தை பெரியவாதான் பாத்துக்கணும் என்றார். ஸ்ரீ மகாபெரியவா பாட்டியிடம் **"நீ நிறைய செய்துட்ட, இனிமே இந்தக் குழந்தையை நான் பார்த்துக்கறேன்"** என்றார் உன்னிடம் கேட்கும் முன்பே இவனிடம் என்னுடன் வரயானு?" கேட்டேன்" என்றார். பிறகு ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் உன் அப்பாக்கு நமஸ்காரம் செய்து அபிவாதயே சொல்லி அவரிடம் ஸ்ரீ பெரியவா என்னை கூப்பிடறா நான் அவருடன் போகிறேன் என்று சொல்லு. உன் அப்பா மடத்தில் உன்னை யார் பார்த்துப்பா? என்பார். அதற்கு **"நீ என்னை ஸ்ரீ மகாபெரியவா பார்த்துப்பா. உன்னை தம்பி பார்த்துப்பானு சொல்லு"** என்றார்.

"ஒரு வேட்டி, துண்டு, சொம்பு எடுத்துண்டு வா" என்றார். நானும் அவ்வாறே சொல்லி ஸ்ரீ மகாபெரியவாளோட கிளம்பிவிட்டேன் பல்லக்கு வேகமாக போக நானும் ஸ்ரீ மகா பெரியவாளோட ஓடினேன். இதை பார்த்த ஸ்ரீ பெரியவா என்னை பார்த்து, "நீ குழந்தை

பின்னாலே சின்ன மாட்டுவண்டி வரது அதில் ஏறிக்கொள்'' என்றார். நான் மாட்டுவண்டியில் ஏறச் சென்றேன். வண்டியில் இருந்தவர்கள் என்னிடம் ''நீ சின்னக்குழந்தை உன்னை ஆத்தில் தேடுவா நீபோ!'' என்று சொல்லி என்னை வண்டியில் ஏறவிடவில்லை. நான் ஸ்ரீ பெரியவாளிடம் சென்று என்னை ஏறவிடவில்லை என்று சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா ''அங்கே மண்ணாதி குதிரை மீது போகிறான் அவனைக் கூப்பிடு'' என்றார்.

(ஸ்ரீ பெரியவாளுடன் மண்ணாதி, டக்கா, தபால் என்று மூன்று குதிரைகள் போகும். மண்ணாதி – சவாரி, மேனாவுடன் கூடப்போவது, டக்கா– வாதியம் வாசிப்பது, தபால்–அந்த ஊரின் தபால்களை சேகரிப்பது) மண்ணாதியிடம் ''இந்தக் குழந்தையை (என்னை) வண்டியில் எற்றிக்கொள்ள சொல்'' என்றார். வண்டியில் இருந்தவர்கள் ஸ்ரீ மகாபெரியவா சொன்னா என்று கேட்டவுடன் பயந்துவிட்டார்கள். நான் அவர்களிடம் நான் ஸ்ரீ மகாபெரியவா சொல்லித்தான் வந்தேன் ஆத்திலும் அப்பாவிடம் சொல்லிவிட்டுத்தான் வந்தேன். என்றேன். அவர்கள் மேலும் பயந்துவிட்டார்கள். அடுத்த ஊர் சென்றவுடன் ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் 'எந்த மாமா உன்னை ஏத்திக்க மாட்டேன்னு சொன்னா?' சொல்லு'' என்றார். நான் மாட்டேன் என்று தலையாட்டினேன். ஸ்ரீ மகாபெரியவா ''ஏன் பயப்படறே? அவா உன்னை ஆத்துக்கு அனுப்பிச்சிடுவானு நினைக்கறயா?'' என்றார். நான் இல்லை, எனக்கு ஸ்ரீ பெரியவாளுக்கு கைங்கர்யம் செய்ய கிடைக்காதோனு பயப்படறேன்னு சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா ''நான் இருக்கேன் பயப்படாம காட்டுனு'' சொன்னா. நான் கை காட்டினேன். ஸ்ரீ மகாபெரியவா ''வெங்கட்ராமா நான் தான் குழந்தையை அழைச்சுண்டு வந்தேன் ஜாக்கிரதையா பார்த்துக்கோனு'' சொன்னா.

இப்படித்தான் நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்து சேர்ந்தேன்.

''ஸ்ரீ மகாபெரியவா எனக்கு தாயாகி, தந்தையாகி, குருவாகி, தெய்வமாகி'' நின்றார்.

*****

# படிப்பு

நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் அடைக்கலம் புகுந்தவுடன் எனக்கு படிப்பு, சமையல், ஸ்லோகம், பழங்களில் உள்ள வகைகள் வாழைப்பழத்தில் எத்தனை ரகம் என்று சொல்லிக் கொடுத்தார்.

பழ வகைகளைப் பற்றி சொல்லிக் கொடுப்பது ரொம்ப அழகாக இருக்கும்.

1) சொம்பின் மீது மாவிலை கொத்து – இது என்ன பழம்? என்றார். எனக்கு தெரியாது என்றேன். நீ கிராமத்தில் இருந்ததால் இது உனக்கு தெரிந்திருக்காது. அன்னாசிப்பழம் என்று சொன்னார்.

2) ஜாடிமேலே குராங்கு. இது என்ன?
முந்திரி பழம்

3) அப்பன் சொரியன் ஆத்தா சடச்சி அவர்கள் பிள்ளை சர்க்கரைகட்டி
பலாப்பழம்

4) பெட்டியை திறந்தால் கிருஷ்ணன் பிறந்தான்
வேர்க்கடலை

5) சொம்புநிறைய கெம்புக்கல்
மாதுளம் பழம்.

ஸ்ரீ மகாபெரியவா விடியற்காலை 3.00யிலிருந்து 3.30 மணிக்குள் எழுந்துவிடுவார். "ஸ்ரீ ஹரி ஸ்ரீஹரி" என்று சொல்வார். நாங்கள் எல்லோரும் தூக்கத்திலிருந்து எழுந்துவிடுவோம். பெண்கள் கற்பூரஹாரத்தி எடுப்பார்கள். பக்தர்கள் எல்லோரும் ஸ்ரீ மகாபெரியவாளின் விஸ்வரூப தரிசனம் பார்ப்பார்கள். ஸ்ரீ மகாபெரியவா ஒரிரு வார்த்தைகள் மட்டுமே பேசுவார்கள். எல்லோரும் மிகவும் சந்தோஷப்படுவார்கள். எப்படி கோபிகாஸ்திரிகளுக்கு பகவான் ஸ்ரீ கிருஷ்ணனை பார்த்துண்டே இருக்கனும்னு தோணுமோ அதேபோல் எல்லா பக்தாளுக்கும் ஸ்ரீ மகாபெரியவாளை பார்த்துண்டே இருக்கணும்னு இருக்கும். அப்படிப்பட்ட ஓர் ஒளி ஸ்வரூபம் ஸ்ரீ மகாபெரியவா. காலைக்கடன்கள் முடித்துவிட்டு ஒருமணி நேரம் ஜபம் செய்வார்கள். இதற்கு

சிஷ்யர்கள் தையல் இலை போட்டு அதன்மேல் கங்கை சொம்பில் ஒரு ஓட்டை போட்டு வைக்கணும். விபூதி மடல் வைக்கணும், கடிகாரம் வைக்கணும். ஸ்ரீ மகாபெரியவா கங்கை தீர்த்தத்தை ப்ரோக்ஷணம் செய்து கொண்டு விபூதியை உடம்பில் சிரசிலிருந்து பாதம் வரை தடவிக்கொள்வார்கள் இதற்கு விபூதி ஸ்நானம் என்று பெயர். பின் விபூதியை நன்றாக குழைத்து நெற்றியில் இட்டுகொள்வார். இதை பார்ப்பவர்களுக்கு ஸ்ரீ மகாபெரியவா சிவஸ்வரூபமாக, ஒளிப்பிழம்பாக, ஜெகஜோதியாக தோன்றுவார். கண்கொள்ளாக்காட்சி. இதற்குப் பிறகு பஞ்சாங்கம் வாசிக்க வேண்டும்.

பஞ்சாங்கம் என்றால் திதி, வாரம், நஷத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்தும் சேர்ந்தது.

1. திதியை சொன்னால் ஐஸ்வர்யம் கிடைக்கும்.
2. வாரம் சொன்னால் ஆரோக்கியம்.
3. நஷத்திரம் சொன்னால் பாவம் போகும்.
4. யோகம் சொன்னால் வியாதி போகும்.
5. கரணம் சொன்னால் காரிய சித்தி ஆகும்.

இதற்கு பஞ்சாங்க படனம் என்று பெயர். ஒரு மணிநேர ஜபம் ஆனபிறகு ஸ்ரீமகாபெரியவாளை தரிசனம் செய்து வேண்டிக்கொண்டால் பலன் உடனே கிடைக்கும். பிறகு, ஸ்நானம் செய்யப் போவார்கள், அப்போது சிஷ்யா எல்லோரும் ஸ்ரீ காமாட்சி ஸ்லோகம் சொல்வார்கள். எப்படி மகாசங்கலபம் செய்து ஸ்நானம் செய்கிறோமோ அப்படி ஸ்ரீ காமாட்சி ஸ்லோகம் சொன்னால் பலன்கிடைக்கும். ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ காமாட்சி ஸ்லோகத்தை அர்த்தத்துடன் சொல்லிக் கொடுத்தார்கள். ஒவ்வொரு குழந்தைக்கும் தாயார் எவ்வளவு முக்கியமோ அப்படி இந்த லோகத்தில் உள்ள எல்லா குழந்தைகளுக்கும் தாயார் அம்பாள்தான்.

அம்பாள் பல சொரூபங்களில் காட்சி தருகிறாள். காமாட்சி, விசாலாட்சி, மீனாட்சி, நீலாயதாட்ஷி, மகமாயி, லலிதாபரமேஸ்வரி, ஸ்ரீ ராஜராஜேஸ்வரி, மகாதிரிபுர சுந்தரி, பார்வதி என்று பல ரூபங்கள்.

ஸ்ரீ மகாபெரியவா "நான் எல்லா நதிகளிலும், புண்ணிய தீர்த்தங்களிலும், ஸ்நானம் செய்து எல்லா சுவாமி தரிசனமும்

செய்துவிட்டு, ராஜா, மந்திரி என்று எல்லோரையும் பார்த்துவிட்டு, பெரிய பண்டிதர்கள், வேதவித்தர்கள், வித்வான்கள், சில மடாதிபதிகள் எல்லோரையும் பார்த்துவிட்டு கடைசியில் காஞ்சிபுரத்தில் ஸ்ரீ காமாட்சியே என் அம்மா என்னை ரட்சி என்று அவள் நிழலில் விழுந்துவிட்டேன்'' என்பார்.

எனக்கு, பாலு, ஸ்ரீ கண்டன், மௌலி ஆகியோருக்கு க்ரந்தம், சமஸ்கிருதம், எல்லா ஸ்லோகங்கள் எல்லாவற்றையும் சொல்லிக் கொடுப்பார். சில ஸ்லோகங்கள் வாத்தியார் சொல்லி கொடுத்து அதை ஸ்ரீ மகாபெரியவாளிடம், நாங்கள் சொல்லவேண்டும். தப்பு இருந்தால் திருத்தி சொல்லிக் கொடுப்பார். என்னிடம் ஸ்ரீ மகா பெரியவாளுக்கு தனி அன்பு. என்னிடம் ''டேய் நன்றாக ஸ்லோகங்கள் மந்திரம் சொல்லவேண்டும், நீ என்னை நம்பி வந்துட்டே.. நாளைக்கு சோடை போய்ட்டேனு யாரும் சொல்லக் கூடாது. நீ முந்தியா? நான் முந்தியானு? தெரியாது. அதனால எல்லாப் பாடங்களையும் நன்றாக படிக்கனும் என்று சொல்லி என்னை மகாபாரதம், இராமாயணம், கனகதாரா ஸ்லோகம், அன்னபூரணாஷ்டகம் இன்னும் பல ஸ்லோகங்களை படிக்கச் சொன்னார். தோரகாஷ்டகம் சொல்லி நமஸ்காரம் செய்யச் சொல்வார்.

ஸ்ரீ மகாபெரியவா சொல்வார் மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது சரியான முறை. மாதாவிற்கு முதல் இடம். அம்மா சொல்லித்தான் ஒரு குழந்தைக்கு அப்பாவை தெரியும். பின் குரு என்பவர். நல்ல பழக்கம், அறிவுக்கு வேண்டிய பாடம், ஸ்லோகம், தெய்வங்களின் அற்புதங்கள் எல்லா நல்லது கெட்டது போன்ற எல்லாவற்றையும் சொல்லிக் கொடுக்கிறார். என்றார். நான் ஸ்ரீ மகா பெரியவாளிடம் எனக்கு என் மாதா, பிதா, குரு, தெய்வம் எல்லாமே நீங்கள்தான் உம்மாச்சி என்றேன் உம்மாச்சி சிரித்துக் கொண்டார்.

ஸ்ரீ மகாபெரியவாளிடம் நான் கண்ட தாய் அன்பு சொல்லிமுடியாது. நினைத்தாலே பேரின்பம். ஸ்ரீ மடத்தில் என்னை மற்ற சிஷ்யர்களுக்கு அவ்வளவாக பிடிக்காது. நான் அசடு, பித்துக்குளி என்பார்கள். சாப்பிடப்போகும் போது என்னை கூப்பிடமாட்டார்கள். நான் பசிக்கும்போது சாப்பிடலாம் என்று போனால் எல்லாம் தீர்ந்து போயிருக்கும்.

இது என் தப்புத்தான். இது மற்றவர்களின் தப்பு இல்லை. அவர்கள் என்னை ஸ்ரீ மகாபெரியவா பார்த்துப்பானு இருந்தா. ஆனால் ஸ்ரீ மகாபெரியவா என்னை தினம் காலை, இரவு நேரங்களில் கூப்பிட்டு **'சாப்பிட்டயா?'** என்று கேட்பார். என்னிடம் மட்டும் இல்லை எல்லோரிடமும் ஸ்ரீ மகாபெரியவா கேட்டும் கேள்வி எல்லோரும் சாப்ட்டாளா? சாப்பாடு சரியாக இருந்ததா? என்ற ஒரு தாய் அன்பின் வார்த்தை தான் ஒரு நாள் ஸ்ரீ மகாபெரியவா இரவு என்னை சாப்பிட்டயா? என்று கேட்டார். நான் தயக்கத்துடன் ஒருபழம் சாப்பிட்டேன் என்று அழாத குறையாக சொன்னேன். பசியால் வந்த அழுகை சின்னவயது. உடனே ஸ்ரீமகாபெரியவா மேனாவிலிருந்து இரண்டு வாழைப்பழம் கொடுத்து சாப்பிட சொன்னார். சொம்பில் அவருக்காக வைத்திருந்த பாலை எனக்கு கொடுத்து உட்கார்ந்து சாப்பிடு என்று அன்பாக சொன்னது இன்றும் என் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கு.

நீ பள்ளிக்கூடத்தில் படித்தாயே என்ன சொல்லிக் கொடுத்தார்கள் என்று கேட்பார். நான் சின்ன சின்ன கணபதி, சரஸ்வதி ஸ்லோகங்கள். சில பகவத்கதைகளும் கற்றுக் கொண்டேன் என்றேன். ஆனால் எனக்கு நிறைய சொல்லிக் கொடுத்தது ஸ்ரீ மகாபெரியவா என்ற கருணாமூர்த்தி. சொல்லிக் கொடுத்ததை எழுதிப்பார்க்கச் சொல்வார். ஸ்ரீ மகாபெரியவா சொல்வா "எனக்கு என் குரு எழுதிபார் மறக்காமல் இருக்கும்' என்று சொன்னார். அதை உனக்குச் சொன்னேன் என்பார். ஒரு குருவாக

என்னுடைய சிறிய வயதில் ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் காட்டிய அன்பை கண்டு பொறாமை கொண்ட சில சிஷ்யர்கள் என்னை மனம் ரொம்பவும் வருந்தும்படி நடந்துகொண்டார்கள். எனக்கு ரொம்ப வருத்தமாகவும், அழுகையும் வந்ததால் நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொல்லிக் கொள்ளாமல் ஸ்ரீமடத்தைவிட்டு ஊருக்கு வந்துவிட்டேன். இதை அறிந்த ஸ்ரீமகாபெரியவா என்னை ஆள் அனுப்பி கூப்பிட்டு வந்து **"உனக்கு நான் இருக்கேன்"** கவலைப்படாதேனு சொன்னா. இந்த பாக்யம் யாருக்கு கிடைக்கும். அவர் ஒரு கருணைக்கடல் அன்றோ.

ஒருநாள் நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் நான் மக்கு, பித்துக்குளி எனக்கு ஒன்றும் தெரியாது நான் என்ன செய்வேன் என்று அழுதேன் அதற்கு அவர் தாய் குழந்தையை தேற்றுவது போல் **"நானும் 'பித்துக்குளி தாண்டா'** என்று சொல்லி **"பித்தா பிறைசூடி"** என்ற பாடலை பாடினார். இதுதான் அந்த தயாபரனின் கருணை. இது பசு தன் நாக்கால் கன்றுக்குட்டியை தடவி கொடுப்பது போன்ற ஒரு சுகம்.

## குருவின் முக்கியத்துவம்

காஞ்சிபுரத்திலிருந்து 8 கிலோ மீட்டர் தொலைவில் அரக்கோணம் செல்லும் பாதையில் கோவிந்தவாடி அகரம் என்னும் கிராமம் உள்ளது. அங்கு ஸ்ரீ தட்சிணாமூர்த்தி கோவில் உள்ளது. அங்கு ஸ்ரீ ஆதிசங்கரர் தண்டத்துடன் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். உலகுக்கே குருவான ஸ்ரீ ஆதிசங்கரருக்கே குரு கடாக்ஷம் கிடைக்க ஸ்ரீ தட்சிணாமூர்த்தி என்ற குருவை நமஸ்கரித்து அருள்பெற்றார். அதனால் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி எவ்வளவு பெரிய குரு என்பதை ஸ்ரீ மகாபெரியவா இதன் மூலம் தெரியபடுத்தினார். ஸ்ரீ மகாபெரியவா சொல்வார் **"குரு கடாக்ஷம் எப்பொழுதும் மிகவும் முக்கியம்.** எப்பொழுதும் வேண்டும். குருவை நினைத்து எந்த ஒரு வேலையையும் செய்ய செயல்படுங்கள். ஸ்ரீ ஆதிசங்கரரின் கிருபையால் நான் தெரிந்து கொண்ட கோயில்களுக்கு எல்லோரும் போய் வாருங்கள்" என்பார்.

## ஒரு தாய் குழந்தையிடம் விளையாடியதுபோல்

ஒரு முறை மேனாவில் போகும்போது ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "கொஞ்ச நேரம் பொறுத்து மேனாவை திறந்துபார் நான் இருக்கேனானு கண்டுபிடி" என்றார். "உனக்கு மனதில் என்ன தோன்றுகிறதோ செய்" என்று சொல்லிவிட்டு மேனாவின் கதவை மூடிக்கொண்டார். சிறிது நேரம் ஆன பிறகு மேனாவை திறந்து

பார்த்தேன். ஸ்ரீ மகாபெரியவாளை காணவில்லை. அழுகை தாங்கவில்லை. "உம்மாச்சி உம்மாச்சி" என்று சொல்லிக்கொண்டே தாய் ஒளிந்து கொண்டு தன் குழந்தையை கண்டுபிடி என்று சொல்லி விளையாடும் போது அந்தக் குழந்தை கட்டிலில் உள்ள மெத்தையை கூட தூக்கி பார்க்கும். அதே போல் நானும் மேனாவில் உள்ளே தேடினேன். ஸ்ரீ மகாபெரியவாளை காணவில்லை. மேனாவை மூடிவிட்டு அழுதேன். பல்லக்கு தூக்குபவர்களில் ஒருவர் ஸ்ரீ குஞ்சு என்பவர். அவர் "ஏன் சாமி அழறே?" என்று கேட்டார். உங்களுக்கு புத்தி இருக்கா? வெறும் பல்லக்கை தூக்கி செல்கிறீர்களே? ஸ்ரீ மகாபெரியவாளை காணோம்" என்று அழுதுகொண்டே கேட்டேன். அதற்கு அவர் ஸ்ரீ மகாபெரியவா சாமான்யப்பட்டவர் இல்லை. ஸ்ரீ ஆதிசங்கரர் கூடுவிட்டு கூடு பாய்வதுபோல் ஸ்ரீ மகாபெரியவாளும் அப்பேர்பட்டவர். உனக்கு நாளடைவில் தான் ஸ்ரீ மகாபெரியவாளின் அருமை தெரியும் என்றார். பிறகு என் மனது சமாதானம் ஆகியது. தைரியம் வந்தது. சில நேரங்களுக்கு பிறகு ஸ்ரீ மகாபெரியவா மேனாவிலிருந்து என்னை கூப்பிட்டார். "நீ திறந்து பார்த்தபோது நான் இருந்தேனா" என்று கேட்டார். நான் பார்த்தேன். நீங்கள் இல்லை. நான் உட்கார்ந்து அழுதேன் என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா "நீ அழும்போது உன்னை சமாதானம் செய்ய யாராவது வந்தாளா? என்று கேட்டார்" வந்தா நீங்கள் பல்லக்கு தூக்குபவருக்கு காட்சி கொடுத்தீர்கள் எனக்கு அந்தக்காட்சி கிடைக்கவில்லையே என்று அழுதேன். ஸ்ரீ மகாபெரியவா "சரி. அவன் என்ன சொன்னான்?" என்று கேட்டார். நான் "உனக்கு நாளடைவில் புரியும்" என்று சொன்னார் என்று கூறினேன். ஸ்ரீ மகாபெரியவாளும் ஆமோதிப்பதுபோல் தலை ஆட்டினார். அப்போது எனக்கு வயது 15 இருக்கலாம்.

**போகிகள் (மேனா தூக்குபவர்கள்) பாடும் பாட்டு**

ராமா ராமய்யா
காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி
தேவா தேவா மஹா தேவா
ஸ்ரீ ராம ஜெயம் ஜெயம்
இருபுரம் திரிபுரசுந்தரியே. (ராமா...)

மற்றொரு முறை ஸ்ரீ மகாபெரியவா என்னை தூக்கிவிடு என்று சொன்னார். நானும் ஸ்ரீ பெரியவாளின் இடுப்பில் கை கோத்து தூக்கினேன். முடியவில்லை. நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் "ரொம்ப கனமாக இருக்கேள் முடியவில்லை" என்றேன். கொஞ்சநேரம் கழித்து "இப்ப தூக்கு" என்றார் தூக்கினேன். பஞ்சுபோல் இருந்தார். ரொம்ப ஆச்சர்யப்பட்டேன்.

*****

நான் சிறு குழந்தையாக இருந்தபோது பெரியவா பல்லக்கில் போகும் போது பல்லக்குடன் நடந்து செல்வேன். பெரியவா நீ குழந்தை நீ வரவேண்டாம் மடத்திலேயே இரு என்பார். நான் நீங்கள் இருக்கும்பொழுது உங்களுடன் வருவேன் என்று சொல்லி நானும் கூட செல்வேன். இடம் சென்றபிறகு தூங்கி விடுவேன். பெரியவா வேதபுரி எங்கே என்று கேட்பார் என்னுடன் வந்தவர்கள் அவன் தூங்ககிறான் காலை வலிக்கிறது என்று அழுகிறான் என்றனர். ஸ்ரீ மகாபெரியவா அவன் குழந்தை ஒன்றும் சொல்லவேண்டாம். கொஞ்சம் விளக்கெண்ணையில் மஞ்சள் பொடி கலந்து அவன் காலில் தடவி விடுங்கள். என்று கூறுவார். இது தாய் தன் குழந்தையை கவனிப்பது போல் ஆகும்.

*****

ஸ்ரீ மகாபெரியவாளுக்கு நான் தினமும் பஞ்சாங்கம் வாசிக்கணும். மூலா நட்சத்திரம் அன்று ஸ்ரீமகாபெரியவா காஷ்டமௌனம் இருப்பார். காஷ்டமௌனம் என்றால் செய்கை கூட காண்பிக்கமாட்டார். நான் பஞ்சாங்கம் வாசிக்கும்போது திதி, வாரம், நஷத்திரம், யோகம் படித்துவிட்டு கரணம் படிக்கவில்லை. ஸ்ரீ மகாபெரியவா மௌனத்தில் இருந்ததால் கை செய்கையில் குட்டிக்கரணம் போடுவதை காண்பித்தார். நானும் குட்டிக் கரணம் போட்டேன் எல்லோரும் சிரித்தார்கள். என்னிடம் நீ ஏன் கரணம் போட்டே என்று கேட்டு கிண்டல் செய்தனர். நான் ஸ்ரீமகாபெரியவா குட்டிகரணம் போட்டா நானும் போட்டேன் என்றேன். பின் அவர்கள் உன்னை கரணம் படிக்கச்

சொன்னார்கள் என்றனர். இந்த மக்கு, பித்துகுளிக்கு ஒன்றும் புரியவில்லை. மறுநாள் ஸ்ரீ மகாபெரியவா **"நேற்று உன்னை கரணம் படி என்று சொன்னேன் நீ ஏன் குட்டி கரணம் போட்டே?"** என்றார். நீங்கள் கரணம் போட்டேள் நானும் போட்டேன் என்றேன். ஸ்ரீ பெரியவா சிரித்து கொண்டார். நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் நீங்கள் ஏன் இப்படி மௌனம் இருக்கிறீர்கள் என்று கேட்டேன். அதற்கு அவர் ''நான் (ஸ்ரீ மகாபெரியவா) அம்பாளை நினைத்து கொண்டு இருக்கிறேன்'' என்றார். இது சதாராவில் நடந்தது.

*****

மற்றொரு முறை நான் ஸ்ரீ மகபெரியவாளிடம் என்னை எல்லோரும் கேலியாக பேசுகிறார்கள் என்று அழுதேன். இது ஸ்ரீ பெரியவாளுக்கும் தெரியும். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா உனக்கு ரொம்ப தாகமாக இருக்கும் போது குப்பை விழுந்துவிட்ட தண்ணீர் கிடைத்தால் நீ குப்பையை வடிகட்டிவிட்டு தண்ணீர் குடிப்பாயா? என்றார். நான் ஆமாம் என்றேன். அந்த தண்ணீர் நான் தான் உன்னை கிண்டல் செய்தவர்கள் குப்பை என்று எடுத்துக்கொள் என்றார். என் குரு.

*****

ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் தாய் குழந்தையிடம் விளையாடுவது போல் என்னை அழவிட்டு விளையாடுவார். விடியற்காலையில் என்னை எழுப்பி செய்தித்தாள் படிக்கச் சொன்னார். விடியற்காலை நான்கு மணி இருக்கும். நான் எழுத்துக்கூட்டி ஜியர் மரணம் என்று படித்தேன். ஸ்ரீ மகாபெரியவா ''என்ன? படிக்கர நன்றாகப் படி'' என்றார். நான் திரும்பவும் ஜி–ய–ர் மரணம் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் காசி கண்ணனை கூப்பிடு என்றார். நான் கூப்பிட்டேன் காசி கண்ணன் என்னிடம் உனக்கும், பெரியவாளுக்கும் வேறு வேலை இல்லை அவர் ஏதாவது ஸ்ரீ பெரியவா உன்னை கிண்டல் செய்கிறார் என்றார். செய்தியை படித்தார். அதில் ஜியா மரணம் என்று என்று இருந்தது. நான் ஜியா என்ற எழுத்தில் 'ர்' என்றும் எழுத்தின் மேல் புள்ளி இருப்பதாக நினைத்து ஜியர் என்று படித்த தவறு புரிந்தது.

*****

காசி கண்ணன் ஸ்ரீ மகாபெரியவாளின் உத்தரவின் படி காசியில் காமகோட்டீஸ்வரர் கோயிலும், காலடியில் 'ஸ்தூபி'யும் கட்டினார்.

*****

ஸ்ரீ மகாபெரியவா அனுஷ்டானம் செய்துவிட்டு ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் பூஜைக்கு சென்றுவிடுவார். ஸ்ரீ மகாபெரியவா பூஜை செய்யும் விதமே அழகு, ஆனந்தம். பூஜையில் லயித்துவிடுவார்கள். பகவானுக்கு பால் அபிஷேகம் செய்யும்போது பால் சுத்த ஸ்படிகலிங்கத்தின் உள்ளே செல்வதை பக்கத்தில் உள்ள பக்தர்கள் பார்த்து ஆனந்தத்தை அனுபவிப்பார்கள். நானும் அனுபவித்தேன் பூஜைக்கு வேண்டிய சின்ன சின்ன கைங்கர்யங்கள் ஸ்ரீ மகாபெரியவா சொல்லித்தருவார்கள். நாங்கள் ஏதாவது தப்பு செய்துவிட்டால் பூஜை முடிந்தவுடன் எங்களை கோபித்துக் கொள்வார். பிறகு ஒரு தாய் குழந்தையை கோபித்துக்கொண்டு பின் அன்பு செலுத்துவது போல் "டேய் நான் கோவிச்சுண்டேனு மனசு கஷ்டப்பட்ரயா" என்பார். ஸ்வாமிக்கு புஷ்ப அலங்காரம் செய்வார்.

*****

ஸ்ரீ மகாபெரியவா காலை பல்தேய்த்து குளித்து ஒரு மணி நேரம் ஜெபம் செய்தபிறகு ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரருக்கு பூஜை செய்தபிறகு பிட்க்ஷை செய்வார். பிட்க்ஷை என்பது – சாமிக்கு நெய்வேத்யம் செய்த சாப்பாட்டை ஒரு இலையில் சாதம், தொன்னைகளில் சாம்பார், ரசம், காய்களை வைத்துவிட்டு நாங்கள் வெளியே விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்வோம். சாப்பாடு ஒரு முறை தான் இரண்டாம் முறை கேட்கமாட்டார். கை அலம்ப தினமும் புது மண் சட்டி வைக்கப்படும் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு பிட்க்ஷை செய்தவர்கள் ஒரு தட்டில் கல்கண்டு, திராட்சை, துளசி, கிராம்பு, ஏலக்காய், முந்திரி இவைகளை வைத்து நமஸ்காரம் செய்வார்கள். ஸ்ரீ மகாபெரியவா அதில் சிறிது வாயில் போட்டுக் கொண்டு மீதியை பிக்ஷை செய்தவர்களுக்கு பிரசாதமாக கொடுப்பார். பின் சிறிது நேரம் ஓய்வு

எடுத்துக்கொண்டு ஏஜெண்ட், கேஷியர் இல்லாவிடில் மேனேஜரை கூப்பிட்டு கணக்கு கேட்பார். உக்ராணகாரரை கூப்பிட்டு “எத்தனைபேர் சாப்பிட்டார்கள்? நன்றாக சாப்பிட்டார்களா? எவ்வளவு அரிசி எடுத்தாய்? போதுமானதாக இருந்ததா? எல்லோருக்கும் நெய் போட்டாயா? சாப்பிடுபவர்கள் போதும் என்று சொல்லும் வரை சாப்பாடு போட்டாயா?” என்று அன்புடன் கேட்பார். கணக்கு கேட்பார். அந்தந்த நாளில் ஸ்ரீ மகாபெரியவா மடத்தில் கணக்கு பார்ப்பவர்களிடம் “இன்று சாயந்திரம் பூஜை நடக்கும் போது தீப நமஸ்காரம் செய்யும் சமயத்தில் எப்படி பரதன் ஸ்ரீ ராமனின் பாதத்தில் ராஜாங்கத்தின் வரவு, செலவுகளை வாசிப்பாரோ அதுபோல் இங்கு ஸ்ரீ ஆதிசங்கரரின் பாத சந்நதியில் அவர் பாதத்தில் நீங்கள் வரவு, செலவு கணக்குகளை வாசியுங்கள்” என்பார். ஸ்ரீ மகாபெரியவாளுக்கு பக்தர்கள் கொடுக்கும் தரிசன காணிக்கைகளை மடத்தின் நிர்வாகத்திற்கு கொடுத்து விடுவார்கள். அவருக்கென்று எதுவும் வைத்துக் கொள்ள மாட்டார். தீப நமஸ்காரம் – அதாவது மாலையில் சுவாமி இருக்கும் அறையில் ஸ்ரீ மகாபெரியவா தீப நமஸ்காரம் செய்வார்கள். முதலில் ஸ்ரீ ஆதிசங்கரர் பாதுகைக்கு நமஸ்காரம் செய்வார். பின்பு ஸ்ரீ ஆதிசங்கரரின் பாதுகைக்கு கற்பூர ஆரத்தி காண்பித்து புஷ்பாஞ்சலி செய்வார்கள். புஷ்பாஞ்சலி செய்தபின் பதஞ்சலி ஸ்லோகம், சம்பு நடனம் செய்வார். சம்பு நடன ஸ்லோகத்தில் எழுத்துக்களில் கொம்பு கால் இரண்டும் கிடையாது. அதாவது ஒரு எழுத்து ‘கொ’ என்று எடுத்துக் கொண்டால் ‘ெ’ என்ற எழுத்தும் ‘ா’ என்ற எழுத்தும் கிடையாது. சிஷ்யர்கள் சம்பு நடன ஸ்லோகம் சொல்ல ஸ்ரீ வாஞ்சியம் ராமசந்திர அய்யர் சம்பு நடனம் செய்வார். சம்பு நடன ஸ்லோகத்தை வீட்டில் தினமும் சாயங்கால வேளைகளில் போட்டால் மிகவும் நல்லது. தினம் “ராம் ராம்” சொல்ல வேண்டும். பிரதோஷம், மாத சிவராத்திரி சமயங்களில் ‘சிவசிவ’ சொல்ல வேண்டும். மற்ற எல்லா ஸ்லோகங்களும் சொல்ல வேண்டும். பின் யானைக்கு பூஜை செய்து ஆரத்தியை யானையிடம் கொட்டி விடுவார்கள். யானை ஸ்ரீ ஆதிசங்கரர் பாதத்திற்கு சாமரம் வீசும். ஸ்ரீ மகாபெரியவா யானைக்கு பழம் கொடுப்பார்கள். யானை

துதிக்கையை தூக்கி கொண்டு உட்கார்ந்து நமஸ்காரம் செய்யும். பின், ஸ்ரீ ஆதிசங்கரர் பாதுகைமுன் அன்றைய கணக்கு வாசிக்கப்படும். பின் மூன்றாம் கால பூஜை நடைபெறும். இரவு 9மணி முதல் காலை 6மணி வரை சுவாமியிடம் பிராமண பாரா (duty). உள் பாராவில் டவாலி கத்தியுடன் duty வெளி பாராவில் துப்பாக்கியுடன் ஒரு ஆள் ஒவ்வொரு மணிக்கும் மணியடிக்க வேண்டும். விடியல் 5 மணிக்கு டமாரம் வாசிக்கப்படும், பூஜை சமயத்தில் டமாரம், டங்கா, கௌரிகாளை சந்தன அபிஷேகம், தீப ஆராதணை முடிய வாசிக்கப்படும். மங்கள வாத்தியம் என்று ஸ்ரீ மகாபெரியவா சொல்வார்கள். எல்லா வாத்தியங்களும் வாசிக்கப்படும். நான், ஸ்ரீகண்டன், பாலு, குமரேசன் மாறிமாறி ஸ்ரீ மகாபெரியவாளிடம் இருப்போம், ரவி, ராதாகிருஷ்ணனும் சிலசமயம் இருப்பார்கள். நான், ஸ்ரீகண்டன், பாலு ஸ்ரீ மகாபெரியவாளை விட்டு அகலமாட்டோம். இரவில் ஸ்ரீ பெரியவா என்னைக் கூப்பிட்டு "இன்று என்ன விஷயங்கள் எல்லாம் நடந்தது. எத்தனை பிக்ஷாவந்தனம் பாத பூஜைகள் செய்தார்கள்" என்று கேட்பார் "எனக்குத் தெரியாது உம்மாச்சி" என்பேன். சில சமயம் மேனாவிலும், சில சமயம் தரையிலும் ஸ்ரீ மகாபெரியவா படுத்துப்பா. தலைக்கு ஒரு மூங்கில் தட்டை துணியால் சுற்றி வைப்பேன். சில சமயம் உபயோகிப்பார். பலமுறை மறுத்து விட்டார். ஸ்ரீ மகாபெரியவாளுக்கு காலை ஒருமணி நேரம் ஜபத்திற்கு கங்கை சொம்பு வைப்பது, கடிகாரம் வைப்பது, பஞ்சாங்கம் வாசிப்பது அன்று என்ன விசேஷம் என்பதை எப்படி செய்யவேண்டும், சொல்ல வேண்டும் என்பதையும் எனக்கு என் தந்தையாக ஸ்ரீ மகாபெரியவா சொல்லிக் கொடுத்தார். ஒரு குழந்தை தன் தாய், தந்தைக்கு படுக்கைகளை தயார் செய்வது போல் நான் என் தாய், தந்தை, குரு, தெய்வமான ஸ்ரீ மகாபெரியவாளுக்கு கோரைபாய் இல்லையேல் தாழம்பாய் மீது நாலு, ஐந்து துணிகளை விரித்து படுக்கை தயார் செய்வேன்.

# ப்ரதோஷ அலங்காரம்

சுவாமிக்கு ரிஷபவாகனம், அம்பாளுக்கு சிம்மவாகனம், தேரில் வைத்து புஷ்பத்தால் அலங்காரம், அலங்காரத்தை பார்த்தால் புஷ்பத்தேர் ஓடிவருவது போல் ஓர் உணர்வு. அவ்வளவு அழகு. தீப ஆராதனை சமயத்தில் ஸ்ரீ மகாபெரியவா தலையில் ருத்திராட்ச கீரிடம், காதைச்சுற்றி ருத்திராடசம், கைகளில் ருத்திராட்ச சுற்று, கழுத்தில் ருத்திராட்ச மாலைகள் அணிந்து தீப ஆராதனை செய்வார். பார்ப்பதற்கு ஆனந்தமான காட்சி. இது ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் பூஜை ஒப்படைக்கும் வரை நடந்தது.

சில சமயம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் வேண்டுதலுக்கு ஏற்ப ஸ்ரீ மகாபெரியவா பூஜை செய்வார்கள். பிட்ஷாவந்தனம் நடக்கும். பிரசாதமாக குங்குமம், விபூதி அளிக்கப்படும்.

ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரரின் பூஜை செய்யும் போது மட்டும் ஒரு வேளை பிட்கைஷ சாப்பிடுவார். இரவில் ஏதோ ஒரு ஆகாரம். பூஜையை ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் ஒப்படைத்தபின் ஸ்ரீ மகாபெரியவாளின் ஆகாரம் நெல் பொரி மட்டுமே.

பிரசாதம் யாராவது கொண்டு வந்து உம்மாச்சிக்கு கொடுப்பா. அதை ஸ்ரீ மகாபெரியவா (உம்மாச்சி) தன் தலைமீது வைத்துக் கொண்டு பின் தான் கொஞ்சம் எடுத்துக்கொண்டு, கொண்டுவந்தவாளுக்கே கொடுப்பா சிலபேருக்கும் கொடுப்பார்கள்.

கொண்டு வந்தவாளுக்கே கொடுப்பா என்பது அவர் எவ்வளவு பக்தியுடன் இருக்கிறார் என்பதை பொருத்தது. உம்மாச்சிக்கு எல்லோர் மனதையும் படிக்கத்தெரியும்.

குழந்தைகள் உம்மாச்சி என்று கூப்பிடுவது மிக சரி ஏன் என்றால் உமா+மஹேஸ்வரன் என்பதே உம்மாச்சி என்ற விளக்கமாக தெய்வத்தின் குரலில் உள்ளது.

*****

# மைலாப்பூர் கேம்ப்

பெரிய பண்டிதர்கள் எல்லோருக்கும் பாஷ்ய பாடத்தில் வாக்குவாதம் நடந்தது. அதில் கல்கத்தா அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள், தேதியூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் (இவர் ஸ்ரீ மகாபெரியவாளுக்கும், ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சந்திரசேகரபாரதிக்கும் பக்தர்) இருவருக்கும் பாஷ்ய பாடத்தில் வாக்குவாதம். அப்போது ஸ்ரீ மகாபெரியவா தன் ஸ்நானம், அனுஷ்டானம் முடித்துக்கொண்டு அங்குவந்தார். "நீங்கள் இருவரும் சாஸ்திரம், சம்பிரதாயங்களை நிறைய படித்து கரைத்துக் குடிச்சவா, நான் ஒன்று சொல்றேன் அதற்கு அர்த்தம் சொல்லுங்கோ" என்றார். என்ன சொன்னார் என்று எனக்கு நினைவில் இல்லை. அந்த இருவரும் ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்கரித்து ஔவையார் சொன்னது போல் கற்றது கை மண் அளவு கல்லாதது உலகளவு என்பதை ஸ்ரீ மகாபெரியவா எப்படி நன்கு உணர்த்திவிட்டார்கள் என்று சந்தோஷப்பட்டனர்.

ஒரு முறை ஒரு முகமதிய மந்திரவாதி எல்லாப் பெண்களிடமும் தகாத முறையில் நடந்துவந்தான். பெண்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் முறையிட்டு அழுதார்கள். ஸ்ரீ மகாபெரியவா அவர்களிடம் "நீங்கள் அவனிடம் உனக்கு மந்திரசக்தி இருந்தால் அதை அங்கு மரத்தின் கீழ் உட்கார்ந்து இருக்கும் அந்த சாமியிடம் காண்பி என்று சொல்லுங்கள். ஆனால், இதை நான் சொன்னதாக சொல்லவேண்டாம்" என்றார். பெண்களும் அவனிடம் ஸ்ரீ பெரியவா சொன்னதை சொன்னார்கள். உடனே அவன் கோபம் கொண்டு ஒரு ஆப்பிள் பழத்தில் தன் எல்லா மந்திர சக்தியையும் கொடுத்து ஸ்ரீ மகாபெரியவாளிடம் கொண்டுவந்தான். ஸ்ரீ மகாபெரியவா அவனை தலை முதல் கால் வரை நன்றாக பார்த்துவிட்டு நீதான் அந்த மந்திரவாதியோ, இந்த பழத்தை இந்த முக்காலி மேல் வை என்றார். அவனும் வைத்தான். கொஞ்ச நேரத்தில் இந்த பழத்தை பிரசாதமாக எடுத்துக்கொள் என்றார். அந்த முகமதியன் 'அல்லா அல்லா' என்று கத்திக்கொண்டே ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்காரம் செய்தான்.

ஸ்ரீ மகாபெரியவா அவனிடம் நான் உனக்கு அல்லாவாக தெரிகிறேனா? என்று கேட்டார். அவனும் ஆமோதித்தான். ஸ்ரீ மகாபெரியவா "அல்லாவாய் புத்தராகி அரன்ஹரி ப்ரம்மனாகி கல்லாத மனதில் கூட காணாமல் இருப்பார் அந்த கடவுள்" என்றார். பின் இந்த பழத்தை யாரும் சாப்பிடவேண்டாம். கடலிலோ, முள்புதரிலோ போட்டுவிடு. இனிமேல் நல்ல புத்தியுள்ளவனாய் உன் கடவுள் அல்லாவை தொழு என்றார். அந்த கருணாமூர்த்தி.

## ஆந்திராவில் கேம்ப்

ஒரு ஆந்திராகார பக்தர் இரண்டு கூடைநிறைய மாம்பழம் கொண்டுவந்து ஸ்ரீ மகாபெரியவாளின் முன் வைத்தார். ஸ்ரீ மகாபெரியவா இதெல்லாம் யாருக்கு? என்று கேட்டார். உங்களுக்குத்தான் சாப்பிடுங்கோ என்றார், அந்த ஆந்திராகாரர். ஸ்ரீ மகாபெரியவா "சிரித்துக்கொண்டே இத்தனை பழங்களையும் நானே சாப்பிட்டால் வயிற்று வலியும் வயிற்றுப்போக்கும் வராதோ" என்றார். அந்த சமயத்தில் மடத்தில் இருந்த குருகுல குழந்தைகள் "தோடகாஷ்டகம்" சொல்லிக் கொண்டே ஸ்ரீ மகாபெரியவாளை வந்தனம் செய்தனர். ஸ்ரீ மகாபெரியவா அந்த ஆந்திராகாரரிடம் "நீ எனக்கு கொடுத்த இரண்டு கூடை மாம்பழங்களையும் நான் தொட்டு எடுத்துண்டேன், இதை நீயே உன் கையால் இந்த குழந்தைகளுக்கு கொடு, மீதி இருக்கும் பழங்களை நாம் இருவரும் சாப்பிடலாம்." என்றார். ஆந்திராகாரரும் குழந்தைகளுக்கு கொடுக்க குழந்தைகள் முகத்தில் ஸ்ரீ மகாபெரியவாளின் ஆசிபெற்ற மாம்பழங்கள் கிடைத்ததில் ரொம்ப மகிழ்ச்சி. கடைசியில் இரண்டு கூடைகளிலும் ஒவ்வொரு பழமாக மொத்தம் இரண்டு பழங்கள் மீதி இருந்தது. ஸ்ரீ மகாபெரியவா அதில் ஒரு கூடையில் இருந்த பழத்தை ஆந்திராகாரரிடம் கொடுத்து "இதை ஆத்துக்கு கொண்டுபோய் துண்டம் போட்டு உன் மனைவிக்கும், குழந்தைகளுக்கும் கொடுத்து நீயும் சாப்பிடுனு" சொன்னார். மற்றொரு கூடையில் உள்ள பழத்தை துண்டம் போட்டு என் சிஷ்யாளுக்கு கொடுக்கறேன். அதனால் நீ

கொடுத்த பழத்தை நான் சாப்பிட்டது போல் ஆகும்" என்றார். இந்த மனசு யாருக்கு வரும். அவர் ஒரு அன்னபூரணி அன்றோ.

ஸ்ரீ மகாபெரியவா எப்பொழுதும் ஸ்ரீ மடத்தைவிட்டு கிளம்பும்போது ஸ்ரீ மகாகணபதிக்கு சதுர்காய் உடைப்பார். பிரார்த்தனை செய்வார் எடுத்த காரியங்கள் நன்றாக நடக்க பூஜையும், எந்த நல்லகாரியம் ஆரம்பிக்கும் முன் மஞ்சள் பிள்ளையார் பிடித்து பூஜை செய்தபின் செய்ய வேண்டும் என உணர்த்தியவர் ஸ்ரீ மகாபெரியவா. மடத்தைவிட்டு வெளிவந்தவுடன் எதிரில் உள்ள ஆஞ்சநேயருக்கு ஒரு சீப்பு வாழைப்பழம் வைத்து ஸ்லோகம் சொல்வார். "புத்திர்பலம் எசோதைரியம் நிர்பயத்தம் அரோகதம் ஆஜாத்யம் பாக்படுதச்ச அனுமத் ஸ்மரனாபவேத்"

இதன் அர்த்தம்: ஒரு காரியத்தை விக்னம் இல்லாமல் செய்ய மகாகணபதியையும், புத்தியோடும், தைரியத்தோடும், பலத்தோடும் செய்ய ஸ்ரீ ஆஞ்சநேயரையும் வணங்க வேண்டும்.

கணபதிக்கு தேங்காயும் ஆஞ்சநேயருக்கு வாழைப்பழமும் உகந்தது.

சதுர்த்தி விரதம் : சதுர்த்திவிரதம் மகாகணபதிக்கு ரொம்ப உகந்த பூஜை. பூஜை முடிந்தவுடன் ஸ்ரீ மகாபெரியவா பிள்ளையாருக்கு தலையில் குட்டி தோப்பிக்கரணம் போடுவார். முதல்தெய்வம் மகாகணபதி. சிவன்–பார்வதி இல்லையா? என்று கேட்காதே. அவர்கள் குழந்தை ஸ்ரீ மகாகணபதி முதற்கடவுள். ஸ்ரீ கணபதிக்கு பிடித்த பூ தும்பைப்பூ, அருகம்புல், வில்வம். பிள்ளையாருக்கு 21 புஷ்பங்கள், 21 இலைகள், (வில்வம்) 21 கொழுக்கட்டை விசேஷம்.

ஸ்ரீ மகாபெரியவா காஞ்சிபுரத்தில் இருக்கும்போது ஸ்ரீ காமாட்சி மாடவீதியை பிரதக்ஷணம் செய்து பின் மடத்துக்கு வருவார்.

*****

ஒரு நாள் நானும் (ப்ரம்மஸ்ரீ) சில சிஷ்யர்களும் ஸ்ரீ மகாபெரியவாளுடன் இருந்தோம். அப்போது வேட்டு சத்தம் கேட்டது. ஸ்ரீ மகாபெரியவா "என்ன வேட்டு சத்தம்" என்றார். ஸ்ரீ காமாட்சி அம்மன் தேரில் வீதி ஊர்வலம் என்றோம். வாருங்கள் நாமும் போகலாம் என்று சொல்லி கிளம்பிவிட்டார். எங்களில் ஒருவர்

அம்மன் கிளம்பி ரொம்ப தூரம் சென்றாகிவிட்டது, இனிமேல் நாம் போவதற்கு ரொம்ப நேரமாகும் என்றார். ஸ்ரீ மகாபெரியவா மகாகணபதியின் காதில் எதோ சொல்லிவிட்டு கிளம்பிவிட்டார். ஸ்ரீ காமாட்சி அம்மன் தேர் இருந்த இடத்திற்கும் சென்று விட்டோம். அங்கு போனதும் எங்களுக்கு ரொம்ப அதிர்ச்சி, ஆச்சர்யம் தேரில் அம்பாளை கொண்டு வந்த கோயில் குருக்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் இந்த யானை படுத்துக்கொண்டு எழுந்து நடக்க மறுக்கிறது, காரணம் புரியவில்லை என்றார். ஸ்ரீ மகாபெரியவா யானையை தடவிக் கொடுத்து "எழுந்திரு" என்று சொன்னவுடன் யானையும் எழுந்து நடக்கத் தொடங்கியது. அப்போது ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ கணபதியின் காதில் சொன்ன விஷயம் எங்களுக்கு புரிந்தது. இன்றும் எனக்கு ஆச்சர்யத்தையும் சந்தோஷத்தையும் கொடுக்கும் நிகழ்ச்சி.

ஸ்ரீ மகாபெரியவா திருச்சியில் உள்ள குணசீலம் கோயிலுக்கு போகும்போது அங்கு சித்தஸ்வாதீனம், துர்தேவதை பிடித்தவர்களை ஸ்ரீ மகாபெரியவா முன் நிறுத்துவார்கள். ஸ்ரீ மகாபெரியவா அவர்கள் கண்களில், முகத்தில் ஜலம் தெளிப்பார்கள். அவர்களின் உடம்பில் இருந்த துர்தேவதை கத்திக்கொண்டே வெளியே போய்விடும். இது ஸ்ரீ மகாபெரியவாளின் தபோபலத்தால் செய்தது.

ஸ்ரீ மகாபெரியவா கல்யாணத்தில் ஏன் வாழைமரம் மாவிலை தோரணம், கட்ட வேண்டும். வாசலில் தினமும் கோலம் போட வேண்டும் என்பதையும் சொன்னார்.

**கோலம்** : அரிசிமாவில் கோலம் போடுவதால் நாம் நம்மை அறியாமல் குட்டிகுட்டி தர்மங்களை செய்கிறோம். அரிசிமாவை எறும்பு, சில பூச்சிகள், காகம், பசுமாடு சாப்பிடுகிறது. இதுவும் ஒரு தர்மம் தானே என்றார்.

**வாழைமரம்** : வாழைமரத்தின் வேரிலேயே குட்டி வாழைமரம் வளரும். அதுபோல நம் குடும்பத்திலும் குழந்தைகள் பிறந்து நம் வம்சம் வளரும். வாழைமரத்தின் எல்லா பகுதியும் உதவும். அதுபோல் நாமும் எல்லா உறவினர்களுக்கும் உதவி செய்ய வேண்டும். என்றார்.

**மாவிலை** : ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரருக்கும், ஸ்ரீ காமாசிக்கும் மாமரத்தின் அடியில் கல்யாணம் நடந்தது. அதனால் நாம் எல்லா சுபகாரியங்களுக்கும் மாவிலை உபயோகிக்கிறோம்.

**பிடி அரிசி :** நாம் தினமும் சமையலுக்கு எடுக்கும் அரிசியிலிருந்து ஒரு பிடியும் 10பைசாவும் சேர்த்து வரவேண்டும். சேர்த்த பைசாவும் ஒரு வாரமோ, ஒரு மாதமோ சேர்ந்தவுடன் வேதபாடசாலைக்கோ, ஏழைக்கோ, கோயில் தர்மங்களுக்கோ கொடுக்க வேண்டும்.

இதை ஸ்ரீ மகாபெரியவா துவங்கி வைத்தார். அவர் ஒரு சர்வவியாபி. எல்லாம் அறிந்தவர். இதோ ஒரு உதாரணம். தனுஷ்கோடியில் புயல் இராமேஸ்வரம் ரொம்பவும் பாதிக்கப்பட்டது. அப்போது பிடி அரிசி திட்டத்தால் சேர்த்து வைக்கப்பட்ட அரிசிகள் பல மூட்டைகளாக இராமேஸ்வரத்திற்கு அனுப்பப்பட்டது. ''தர்மம் தலைகாக்கும்''

**கச்சி மூதூர் டிரஸ்ட்:**

கச்சி மூதூர் டிரஸ்ட் ஸ்ரீ மகாபெரியவா அவர்களால் துவக்கப்பட்டது. இதன் மூலம் ஸ்ரீ மகாபெரியவா சிதைந்து போன கோயில்களை நல்லபடியாக கட்டவும், கடவுளுக்கு பிரசாதமாக கல்கண்டோ, திராட்சையோ நைய்வேத்தியம் செய்யவும், தீபம் ஏற்றவும், குருக்களுக்கு சில மாத வருமானம் கிடைக்கவும் ஏற்பாடு செய்தார். ஸ்ரீ மகாபெரியவா செய்த பல நல்ல செயல்களில் இதுவும் ஒன்று.

காஞ்சிபுரத்தில் 1008 சிவன் கோயில்கள் உள்ளன. அவற்றில் சில வயல்களுக்கு நடுவில் இருந்ததால் வெளியே தெரியவில்லை. ஸ்ரீ மகாபெரியவா அவற்றையெல்லாம் கண்டு பிடித்து சில பெரியமனிதர்களின் உதவியுடன் சிவாச்சார்யார்களை நியமித்து அந்த கோயில்களை சரிசெய்து கும்பாபிஷேகம் செய்தார். தானே நேரில் எல்லா கோயில்களுக்கும் சென்று தரிசனம் செய்தார். சிவாச்சாரியார்களுக்கு மாதம் 15 ரூபாய் வருமானம் வழங்கப்பட்டது. இது 1970–80ல் நடந்தது. என்னை (ப்ரம்மஸ்ரீவேதபுரி) எந்த பெரிய மனிதர்கள் வந்தாலும் அந்த கோயில்களுக்கு கூட்டிச் சென்று வரச்சொல்வார். ஸ்ரீ மகாபெரியவாளுடன் கோயில்களுக்கு சென்று வந்த அதிர்ஷ்டமும் எனக்கு கிடைத்தது.

நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் காஞ்சிபுரம் ரொம்ப விஷேசமான ஸ்தலம் என்கிறார்களே ஏன்? என்று கேட்டேன்.

ஸ்ரீ மகாபெரியவா சொன்னார்கள். இங்கு எல்லா தெய்வங்களும், ஈஸ்வரன், அம்பாள், திருமால், பிள்ளையார், முருகன் என்று எல்லா தெய்வங்களும் இருக்கிறார்கள். இதைவிட காசிதான் விசேஷ ஸ்தலம் என்றால் காஞ்சியும் அதற்கு ஒத்த ஸ்தலம். இங்கு காஞ்சிபுரத்தில் ஏழு (7) குளங்கள் இருக்கு. இதில் தினம் ஒரு குளமாக ஸ்நானம் செய்து கடவுளையும் தரிசனம் செய்து வேண்டிக்கொண்டால் நினைத்த காரியம் கட்டாயம் நடக்கும் என்றார். பின் சொன்னார் **காசி பிரித்து சொல் என்றார் கா...சி... என்றேன் காஞ்சி பிரித்து சொல் என்றார் கா...ஞ்...சி என்றேன். 'ஞ்' தாண்டா வித்யாசம் என்றார். inch தாண்டா வித்யாசம்** என்றார் நகைச்சுவையாக

ஏழு குளங்கள் :

காஞ்சிபுரத்தில் வாரத்தீர்த்தங்கள் (ஏழு–குளங்கள்)

| | | |
|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமை | : | கட்சியபேஸ்வரர். இது மடத்திலிருந்து பேருந்து நிலையம் போகும் வழியில் உள்ளது. இந்த குளத்திற்கு எதிரில் சூரியபகவான் கோயில் உள்ளது. |
| திங்கட்கிழமை | : | ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர். |
| செவ்வாய்க்கிழமை | : | மங்களேஸ்வரர் ஸ்ரீ மடத்திற்கு எதிரே உள்ளது. |
| புதன் கிழமை | : | திருகாளீஸ்வரர். |
| வியாழக்கிழமை | : | காயாரோகனீஸ்வரர். |
| வெள்ளிக்கிழமை | : | ஸ்ரீ காமாட்ஷி |
| சனிக்கிழமை | : | சர்வதீர்த்தர். இங்கு தான் ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளுக்கு ஸ்ரீ மகாபெரியவா பட்டமளிப்பு செய்தார். |

# ஒவ்வொரு கிழமைகளில் ஒவ்வொரு சாதம் நைவேத்தியம்

**ஞாயிறு** – கோதுமை ராவாவில் சொஜ்ஜி. (சூரியனுக்கு)

சொல்லிக்கொடுத்த முறை : கொஞ்சம் கோதுமை ரவையை நெய்யில் வறுத்துக்கொண்டு, அதன் அளவிற்கு ஏற்றாற்போல் தண்ணீர் கொதிக்க வைத்து தண்ணீர் கொதித்தவுடன் ரவையை போட்டு வெந்தவுடன் சர்க்கரை போட்டு கொஞ்சம் ஏலக்காய் பொடி போட்டு கொஞ்சம் (வீட்டில் இருந்தால்) குங்குமப்பூ, ஜாதிக்காய், திராட்சை சேர் என்றார். திராட்சை, முந்திரி பருப்பை நெய்யில் வறுத்துப் போடு என்றார்.

**திங்கள்** – ஷீரா அன்னம் (பால் சாதம்) (ஈஸ்வரன்)

ஷீரா அன்னம் என்றால் கொஞ்சம் அரிசியை தண்ணீரில் கொதிக்கவிட்டு பாதிக்குமேல் வெந்தவுடன் பால்சேர்த்து நன்றாக குழைய வேகவைத்து பின் சர்க்கரை சேர்க்கணும். நெய்யில் முந்திரி, திராட்சை வறுத்து போடணும் ஏலக்காய் பொடி சேர்க்கனும்.

| | | |
|---|---|---|
| **செவ்வாய்** | – புளிசாதம் | – அம்பாளுக்கு |
| **புதன்** | – வெண்பொங்கல் | – விஷ்ணு |
| **வியாழன்** | – தயிர்சாதம் | – குருபகவான் |
| **வெள்ளி** | – சர்க்கரைபொங்கல், எலுமிச்சை சாதம் அம்பாளுக்கு. | |
| **சனிக்கிழமை** | – எள் சாதம் | – சனிபகவானுக்கு. |

என்னை (ஸ்ரீ வேதபுரி) ஸ்ரீ மகாபெரியவா இந்த எல்லா இடங்களுக்கும் கூட்டிச்சென்று வந்தார். ஒரு தந்தை தன் பிள்ளைக்கு செய்தது போல். என் தந்தையும் ஆனார்.

*****

ஒரு நாள் மடத்தில் நிறைய மாங்காய் வந்தது. ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் மாங்காய் பர்பி செய் என்றார். நான் தேங்காயில் பர்பி கேள்விபட்டு இருக்கேன் மாங்காயில் எப்படி? என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா "மாங்காயை தோல் சீவி விட்டு தேங்காய் கொப்பரை சீவலில் சீவி நன்றாக வேகவிடு. பின் சர்க்கரை பாகு சேர்த்து, ஏலக்காய், முந்திரி, திராட்சை நெய்யில் வறுத்து போட்டு நன்றாக கிளறு பாத்திரத்தில் ஒட்டாமல் வந்தவுடன் தட்டில் கொட்டு என்று சொன்னார்".

*****

"கோயில் இல்லாத ஊரில் குடி இருக்க வேண்டாம்" என்பது பழமொழி. ஸ்ரீ மகாபெரியவாளின் அபிப்பிராயம் சில இடங்களில் புதுசாக கோயில் கட்டுவதற்கு பதில் இடிந்து போய் சேதமான கோயில்களை புதுப்பித்தால் நல்லது. என்பார். ஏனென்றால் அந்த கோயில்களில் உள்ள தெய்வங்களுக்கு சக்தியும், சாங்கித்யம் (Power) அதிகம் என்பார்.

*****

## ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மகாபெரியவாளிடம் உபதேசம் பெற்ற கதை:

ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளின் தகப்பனார் திரு.மகாதேவ அய்யர். இருள்நீக்கி என்ற ஊரில் பிறந்தவர். ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா சின்ன குழந்தையாக இருந்த போது அவர் தகப்பனாருடன் அடிக்கடி ஸ்ரீ மகாபெரியவாளின் தரிசனத்திற்கு வருவார். ஒரு நாள் ஸ்ரீ மகாபெரியவா அவரிடம் "உங்கள் மகனை ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடத்திற்கு கொடுக்கும்படி" கேட்டுக்கொண்டார். தகப்பனாரின் ஒப்புதலின் பேரில் காஞ்சிபுரத்தில் சர்வதீர்த்த கரையில் தீட்ஷை கொடுத்து ஸ்ரீ மடத்திற்கு மேளவாத்தியங்களுடன் அழைத்து வந்தார்.

பின் ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளுக்கு எப்படி பூஜை செய்ய வேண்டும், பக்தாளிடம் எப்படி பேச வேண்டும் என்றும் வேதவிற்பர்களிடம் வேத சாஸ்திரம் பயிலவும் செய்தார். ஸ்ரீ மகாபெரியவாளும் ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளுக்கு பாடம் சொல்லி கொடுப்பார்கள் மந்திர உபதேசங்களும் செய்தார்.

## பட்டண பிரவேசம்

பல்லக்கில் ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா வருவார்கள். அவரின் பின்னால் யானைமீது அம்பாரி. பல்லக்கில் ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா வருவார்கள். முதலில் 3 யானைகள் அலங்கரிக்கப்பட்டு செல்லும். பின் குதிரையில் டங்கா வாசிக்கப்பட்டு வரும். வெளிச்சத்திற்கு தீவட்டி, பெட்ரமாஸ் லைட் கொண்டு வருவார்கள். பஞ்சவாத்தியம், நாதஸ்வரம், துந்துபி, தோரணம் பிடித்து, வானவேடிக்கைகளுடன் ஊர்வலம் வருவார்கள். அப்போது ஒவ்வொரு வீட்டிலும் பூர்ணகும்பம், பழம், மாலை, கற்பூர ஆரத்தி எடுப்பார்கள். எல்லோர் வீட்டிலும் ரோஜாமாலை, மல்லி மாலை கொடுப்பார்கள். அதை ஸ்ரீ மகாபெரியவா தன் தலைமீது வைத்துக்கொள்வார். இது இரவு 7மணிக்கு ஆரம்பித்து விடியற்காலை 3மணி வரை நடைபெறும். நாங்களும் ஸ்ரீ மகாபெரியவாளுடன் போவோம். கௌரிகாளை என்ற வாத்தியம் வாசிக்கப்படும். இதன் சத்தம் ஒரு பர்லாங் தூரம் கேட்டும். இது ஸ்ரீ மகாபெரியவா வருகிறார் என்பதை ஊர்மக்களுக்கு தெரிவிப்பதற்காக. இந்த வாத்திய சத்தத்தை கேட்டவுடன் எல்லோரும் தயாராக இருப்பார்கள். நிறைய பக்தர்களும் கூட வருவார்கள். ஸ்ரீ மகாபெரியவா பகடி போர்த்திக் கொண்டு, மகரகண்டி (உத்திராட்சம்) போட்டுக் கொண்டு பெரிய ராஜாபோல் காட்சி அளிப்பார்கள். (இந்த காட்சியை நினைத்துப்பாருங்கள் சந்தோஷத்தின் எல்லை) ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா பக்தர்களுக்கு பிரசாதம் கொடுப்பார்கள். அதை வாங்கிக் கொண்ட பக்தர்களின் ஆனந்தத்திற்கு முடிவேது. ஒருமுறை ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "பட்டிணப் பிரவேசம் எப்படிடா?" இருந்தது என்று கேட்டார். நான் ரொம்ப நன்றாக இருந்தது உங்களை பார்த்துண்டே இருக்கணும்

போல இருக்கு என்றேன். அதற்குஸ்ரீ மகாபெரியவா "என்னை பார்க்க எல்லோரும் வரலேடா யானை, குதிரை, வானவேடிக்கை, இவைகளை பார்க்க வந்தாடா என்றார் சந்தோஷமாக. "அவாளோட சந்தோஷம் என் சந்தோஷம்டா" என்றார் அந்த மகா உத்தமர்."

ஸ்ரீ மகாபெரியவா பல்லக்கில் போவதை பார்த்துக் கொண்டிருந்த சிலபேர் ஸ்ரீ பெரியவாளை குறைவாக பேச அப்போதே ஸ்ரீ மகாபெரியவா பல்லக்கிலிருந்து இறங்கி விட்டார். இனி "நான் பல்லக்கில் ஏறமாட்டேன்"என்றும் உறுதியாக சொல்லிவிட்டார். பல்லக்கு தூக்கிவந்தவர்கள் சாமி இப்படியெல்லாம் செய்யாதீர்கள். எங்கள் வாழ்க்கை மிக சந்தோஷமாக இருக்கு. உங்களை தூக்கிக்கொண்டு வருவதால் எங்கள் மனதும் ரொம்ப சந்தோஷமாக இருக்கு என்று எவ்வளவோ மன்றாடி கேட்டார்கள். ஆனால் ஸ்ரீ மகாபெரியவா மறுத்துவிட்டார். உங்களுக்கு மடத்தில் ஏதாவது வேலைக்கு ஏற்பாடு செய்து வருமானத்திற்கு வழி செய்கிறேன். என்று சொல்லி சொன்னதை நிரூபித்தார் அந்த உத்தமர்.

காலில் காலணியும் போடாமல் நடந்ததில் அந்த தாமரைபாதம் வெந்து பெரிய பெரிய புண் வந்துவிட்டது. இரவில் சிஷ்யர்கள் கடுக்காயை அரைத்து அந்த பாதத்தில் தடவுவார்கள் அழுதுகொண்டே. சில காலங்களுக்கு பிறகு எல்லோருடைய வற்புறுத்தலால் கட்டையால் செய்த காலணிகளை அணிந்து கொண்டார். அதுவும் சிலசமயம் தான் அணிந்து கொள்வார். தன் வயது முதிர்ந்த காலத்திலும் சைக்கிள் ரிக்ஷா பிடித்துக்கொண்டு காலில் காலணியும் இல்லாமல் குழந்தை தள்ளுவண்டியை பிடித்து கொண்டு நடப்பது போல் சைக்கிள் ரிக்ஷாவை தள்ளிக் கொண்டு நடப்பார். அந்த உத்தமர்.

*****

# வபணம்

ஸ்ரீ மகாபெரியவா இரண்டு மாதத்திற்கு ஒரு முறை பௌர்ணமி அன்று ஒரு குளம், இல்லை ஆற்றங்கரையில் வபணம் செய்து கொள்வார். இரண்டு பௌர்ணமிக்கு ஒரு முறை ஸ்ரீ மகாபெரியவா வபணம் செய்து கொள்வார். முதலில் சுவாமியை நமஸ்கரித்து விட்டு நதிக்கரை இல்லையேல் தடாகம் இருக்கும் இடத்தில் கரையில் அமர்வார். ஒரு வாழை இலையில் கத்தி, ஒரு கிண்ணத்தில் பால், ஒரு கிண்ணத்தில் தண்ணீர் வைக்கப்படும். ஒரு கடிகாரமும் வைக்கப்படும். ஸ்ரீ பெரியவா முதலில் தன் கையால் பாலை தலையில் தடவிக் கொள்வார். கத்தியையும் தன் தலையில் வைத்து எடுத்துவிட்டு இலையில் வைத்துவிடுவார். பிறகு முடித்திருத்துபவர் ஸ்ரீ பெரியவாளை நமஸ்கரித்து விட்டு தலைமுடி, கை, கால்களில் உள்ள நகங்களை எடுத்துவிடுவார். பின் ஸ்ரீ மகாபெரியவா நதியின் மண்ணை எடுத்து கை, கால்களில் தடவிக்கொள்வார். வாயையும் கொப்பளித்துவிட்டு ஸ்நானம் செய்ய செல்வார்கள். மிர்த்திகை (மண் உருண்டை) 5 பெரிய உருண்டை செய்து வைத்துக்கொள்வோம். ஸ்ரீ மகாபெரியவா கையில் நான்கு பேர் 12முறை சின்ன மண் உருண்டைகளை போடுவோம் அதை பெரியவா முதலில் காலில் தடவிக் கொண்டு 12முறை நீரில் மூழ்கி ஸ்நானம் செய்வார். ஸ்ரீ பெரியவா ஸ்நானம் செய்தபின் நாங்களும் ஸ்நானம் செய்வோம். பின் திரும்பவும் 12 உருண்டைகள் போடுவோம் இடுப்புவரை தடவிக் கொள்வார், 12முறை ஸ்நானம் செய்வார், பின் 12 உருண்டைகள் பெற்றுக்கொண்டு மார்புவரை தடவிக்கொண்டு 12முறை ஸ்நானம் பின் 12 உருண்டைகள் பெற்றுக்கொண்டு முகம், தலையில் தடவிக் கொண்டு 12 முறை ஸ்நானம். பின் 5வது உருண்டை பெற்றுக் கொண்டு உடல் முழுவதும் தடவிக்கொண்டு 12முறை ஸ்நானம். ஸ்ரீ மகாபெரியவாளின் கையில் இருக்கும் தண்டம் ஒரு Stand–ல் வைக்கப்பட்டு இருக்கும். ஸ்ரீ மகாபெரியவாளுக்கும், தண்டம் வைக்கப்பட்டு இருக்கும் Stand–ம் நடுவில் யாரும் போகக்கூடாது. ஸ்ரீ மகாபெரியவா தண்டத்தை எடுத்துக்கொண்டு 12முறை ஸ்நானம்

செய்வார் இதற்கும் மரத்தட்டில் மிர்த்திகை காட்டுவோம். ஸ்ரீ மகாபெரியவாளின் 12முறை ஸ்நானத்திற்கு பிறகு ஒவ்வொருமுறையும் நாங்களும் ஸ்நானம் செய்வோம். பிறகு ஸ்ரீ பெரியவா வஸ்திரம் கட்டிக்கொண்டு ஸ்நானத்தின் போது கட்டிக் கொண்டிருந்த வஸ்திரத்தை நீரில் விசர்ஜனம் செய்துவிடுவார். இதை பக்தர்கள் தங்கள் பிரசாதமாக எடுத்துக் கொள்வார்கள். சில பக்தர்கள் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு சால்வை கொடுப்பார்கள். ஸ்ரீ மகாபெரியவாளுக்கு மங்கள ஆரத்தி எடுத்து, வாத்தியம் வாசிக்கப்பட்டு ஸ்ரீமடம் வரை செல்வார்கள். ஆரத்தி எடுப்பவர்களுக்கு வெள்ளிக்காசு கொடுப்பார்கள். ஸ்ரீ மகாபெரியவா நித்தியபடி பூஜைகளை செய்வார். வருடந்தோரும் ஒவ்வொரு நாளும் பிட்சா வந்தனம் நடைபெறுகிறது. பிறகு பூஜை செய்துவிட்டு சாப்பிடுவார். ஏகாதசி அன்று உபவாசம் இருப்பார். சாதுர்மாஸ்யத்தில் ஸகாவிரதம் அனுஷ்டிப்பார்கள். இது நான்கு மாத விரதம்.

முதல் மாதம் – காய், பழம் சாப்பிடமாட்டார்.

இரண்டாம் மாதம் – பால் கிடையாது

மூன்றாம் மாதம் – தயிர் கிடையாது.

நான்காம் மாதம் – பருப்பு வகைகள் கிடையாது.

நான்காம் மாதம் துளசி விவாகம். அன்று சாதுர்மாஸ்ய விரதம் பூர்த்தி ஆகும்.

**துளசி விவாகம்** என்பது துளசி செடிக்கும், நெல்லிகிளைக்கும் நடக்கும் கல்யாணம். நெல்லிக்கனியுடன் கூடிய கிளையை கொண்டு வந்து வேஷ்டி, அங்க வஸ்திரம் அணிவிப்பார்கள். துளசிக்கு புடவை, ரவிக்கை அணிவிப்பார்கள் ஸ்ரீ சுக்தம், புருஷ சுக்தம் சொல்லி பாராயணம் செய்து பூஜை செய்வார்கள். மாங்கல்ய தாரணமும் நடைபெறும். அந்த துளசி செடியின் நிழலில் ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா பிட்க்ஷை செய்வார்கள்.

*****

# வியாசர் பூஜை செய்யும் விதம்

வெள்ளி ரதத்தில் முழு அட்சதை கொட்டி அதில் எலுமிச்சம் பழம் 60, மாம்பழம் 60 வைத்து நடுவில் கிருஷ்ண விக்ரகம், சாலக்ராமமும் வைத்து பூஜை செய்வார். 60 எலுமிச்சம் பழம் என்பது வியாசரில் தொடங்கி 60 ரிஷிகள் 60 மாம்பழம் நைவேத்யம் செய்ய. உப்பு போடாத பயத்தம் பருப்பு ஊறவைத்து தேங்காய் மூடியில் வைத்து நைவேத்யம். இதுவும் 60. வெள்ளிக்கிழமை, செவ்வாய்க் கிழமைகளில் மறு நாள் புனர்பூஜை. ஒவ்வொரு ரிஷிகளுக்கும் தூபம், தீபம், நைவேத்யம், வில்வ ஆரத்தி செய்வார். வில்வ ஆரத்தி என்பது மூன்று தீபம் போட்ட ஆரத்தி. சாலக்கிராமத்திற்கு புருஷ சுக்தம் அபிஷேகம் தீப ஆராதனை நடைபெறும். இந்த சமயத்தில் எல்லா கோயில்களிலிருந்தும் ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவாளுக்கு பிரசாதம் வரும். ஸ்ரீ மகாபெரியவாளும் பெற்றுக்கொண்டு, அவர்களுக்கும் பிரசாதம் கொடுப்பார். ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா பூஜை முடித்தபின் அந்த கிராம மக்களிடம் தான் இங்கு தங்கப்போவதாகவும், பூஜை முடியும் வரை ஆறு, ஊர் எல்லையை தாண்டமாட்டேன் என்றும் சொல்லி அவர்களின் சம்மதத்தை கேட்டுக்கொள்வார்., உங்களால் முடிந்த உதவியும் செய்யுமாறு கேட்டுக்கொள்வார். வியாசர் பூஜை முடிந்த முதல்நாள் எல்லா வேதவிற்பணர்களும் வேதம் சொல்லி சம்பாவனம் பெற்று கொள்வார்கள். வியாசர் அட்சதையும் பெற்றுக் கொள்வார்கள். வியாசர் பூஜை முடிந்த கடைசி நாள் எல்லையில் விஸ்வரூப கட்டம் வாசிப்பார்கள். பின் யாத்திரை கிளம்பிவிடுவார்.

# நவராத்திரி பூஜை

நவராத்திரி ஒன்பது நாட்களும் பூஜை நடைபெறும். தினம் கன்னியா பூஜை முதல் நாள் ஒரு கன்னி, ஒரு வயது இரண்டாம் நாள் இரண்டு கன்னிகள்,1 வயது, 2வயது, மூன்றாம் நாள் மூன்று கன்னிகள் 1 வயது, 2வயது, 3வயது இது போல ஒன்பது நாளும் நடைபெறும். சரஸ்வதி பூஜை அன்று ஒன்பது கன்னி குழந்தைகள் ஒரு சுவாசினி,

ஒரு பிரம்மச்சாரி பூஜை நடைபெறும். ஒரு சமயம் யாக சாலையில் பாம்பு வந்துவிட்டது. ஸ்ரீ மகாபெரியவா அதை அடிக்க வேண்டாம். கூடைபோட்டு மூடு என்று சொல்லி பின் அதை வெளியில் கொண்டு விட்டார்கள்.நவராத்திரி சமயத்தில் கன்னியா பூஜை முடித்துபின் யாக சாலை போய் தரிசனம் செய்வார். ஒன்பது நாளும் காஷ்டமௌனம். ஸ்ரீ மகாபெரியவாளின் கண்பார்வையாலேயே அவர் என்ன சொல்கிறார் என்பதை நாங்கள் தெரிந்து கொள்வோம். தப்பு செய்து விடுவோமோ என்று பயமாக இருக்கும். முதல் 3 நாள் குதிரை, அடுத்த 3 நாள் யானை, கடைசி 3 நாள் பசுமாடு என்று மாலை 4மணிக்கு பூஜை செய்வார். கடைசி 3 நாள் ஸ்ரீசந்திரமௌலீஸ்வரர் சந்நிதியில் கயிற்றால் பந்தல் போட்டு ஒரு கயிற்றின் நுனியில் நவதானியங்கள் கட்டுவார். பழவகைகள், காய்கறிகள், பூ, வாழைப்பூ, சரக்கொண்ணை, வாழைத்தார், வாழைமரம், தேங்காய், பூங்கொத்து எல்லாவற்றையும் தோரணமாக அலங்காரம் செய்வார். மாலை 7 மணிக்கு அம்பாளுக்கு பூஜை ஆரம்பிப்பார்கள். சகஸ்ரநாமம், நவாபரண பூஜை செய்வார். திமிரி வாத்தியம் வாசிக்கப்படும் அம்பாளுக்கு பூ ஊஞ்சல் செய்து ஊஞ்சல் ஆட்டும் அழகே அழகு. கண்ணில் ஆனந்தக் கண்ணீர் விடுவார். நவாபர பூஜையின் போது ஒன்பது வகை பழங்கள், பாலில் ஏலக்காய், குங்குமப்பூ போட்டு சுவாமிக்கு நைவேத்யம் செய்வார்.

எல்லோருக்கும் தேன் தினைமாவு பிரசாதமாக கொடுக்கப்படும். தங்கப்பிரம்பு, வெள்ளிப்பிரம்பு இருக்கும் சாமரம் எல்லாம் நாங்கள் கையில் வைத்துகொண்டு இருப்போம். நாங்கள் அம்பாளுக்கு சாமரம் வீசுவோம். சரஸ்வதி பூஜை அன்று ஸ்ரீ மகாபெரியவா ஒன்பது கன்னி குழந்தைகள், ஒரு சுவாசினிக்கு பூஜை செய்வார். சரஸ்வதி பூஜை அன்று சாப்பிடும் எல்லா சுமங்கலிகள், குழந்தைகளுக்கு ரவிக்கை துணிகள் கொடுக்கப்படும். வெள்ளிக்காசு கொடுப்பார்கள். எல்லா கடைக்காரர்களும் சாமான்களை கொண்டுவந்து கொடுப்பார்கள்–இதையெல்லாம் நான் (வேதபுரி) பக்கத்தில் இருந்து அனுபவித்துள்ளேன். இவைகள் எல்லாம் மறக்க முடியாத அனுபவம். பக்தர்கள் கொண்டுவரும் மாலைகளை சுவாமிக்கு போடுவார்கள்.

சில சமயம் தானும் அணிந்து கொண்டு "எப்படி இருக்கேன்" என்று கேட்டு பக்தர்களை சந்தோஷபடுத்துவார். வெள்ளிக்கிழமைகளில் வேலூர் ராஜம் மாமி என்பவர் ஸ்ரீ காமாட்சி அம்மனுக்கு சந்தனம் அபிஷேகம் செய்வித்து அதை ஸ்ரீ மகாபெரியவாளுக்கு கொண்டுவருவார்., ஸ்ரீ மகாபெரியவா அதை உடம்பில், நெற்றியில் இட்டு கொண்டு என்னிடம் கொடுப்பார். நாங்கள் எல்லோரும் இட்டுக்கொண்டு பக்தர்களுக்கு கொடுப்போம்.

பௌர்ணமி பூஜை அன்று மாலை ஏழு மணிக்கு பூஜை ஆரம்பித்து 11மணி வரை பூஜை நடைபெறும் பூஜை முடித்து சந்திர தரிசனம் செய்து அரை மணி நேரம் சந்திரனை பார்த்து பூஜை செய்துவிட்டுத்தான் மற்றவர்களுக்கு தரிசனம் கொடுப்பார்.

*****

எனக்கு (ஸ்ரீப்ரம்மஸ்ரீ வேதபுரி) கல்யாணம் செய்துவைத்து என் கல்யாண வாழ்க்கை, குழந்தைகள் கல்யாணம், பூணூல்:

எனக்கு அப்போது 18 வயது, ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "டேய் நீ கல்யாணம் செய்துக்கோ" என்றார். நான் வேண்டாம் கல்யாணம் என்பது சம்சாரசாகரம் எனக்கு வேண்டாம் என்றேன். "ஏண்டா பயப்படறயா"? என்றார். கல்யாணம் ஆனால் உடனே குழந்தை பிறக்கும் என்றேன். "குழந்தை பிறப்பது என்பது வம்சவிருத்தி. ஆறுபேர் சந்தோஷப்படுவா ஆறு பேர் என்றால் நீ, உன் மனைவி, உன் அப்பா, உன் அம்மா, மனைவியின் அப்பா, அம்மா" என்றார் உன் அப்பாவிற்கு வயதாகிவிட்டது. "உன் அப்பாவையும் உன்னையும் பார்த்துக் கொள்ள மனைவி வேணும்டா" என்றார். நான் சரி என்று சொல்லிவிட்டேன். சரி உன் அக்கா, அத்திம்பேரை உனக்கு பெண் பார்க்கச் சொல் என்றார். என் அத்திம்பேர் அடிக்கடி திருவண்ணாமலை ஸ்ரீரமண ஆசிரமம் செல்வார். அங்கு குப்புசாமி அய்யர் என்பவர் ஸ்ரீரமண மகரிஷியிடம் கைங்கர்யம் செய்து வந்தார். தாலுக்கா ஆபீசில் வேலை செய்து ஒய்வு பெற்ற பின் ஸ்ரீ ரமண மகரிஷியிடம் சேர்ந்து விட்டார். அவருக்கு ஒரு பெண், 4 பிள்ளைகள். என் அத்திம்பேர் குப்புசாமியிடம்

பெண் கேட்க அவர் ரமணமகரிஷியிடம் என் பெண்ணிற்கு ஒரு இடம் வந்திருக்கு. பையன் குடுமி வைத்துக் கொண்டு வேஷ்டிகட்டி கொண்டு இருக்கான். மேல் சட்டை போடுவதில்லை. ஸ்ரீஸ்ரீஸ்ரீ மகாபெரியவாளிடம் கைங்கர்யம் செய்கிறான். நீங்கள் சரி என்றால் கல்யாணம் செய்து தருகிறேன் என்றார். "ஸ்ரீ ரமணரும் நீ என்னிடம் இருக்காய் உன் மாப்பிள்ளை ஸ்ரீ மகாபெரியவாகிட்ட இருக்கான். ரொம்ப நன்னா இருப்பா கல்யாணம் செய்" என்றார். அக்கா ஊரில் திருவண்ணாமலையில் இருந்து 10 மையில் தூரத்தில் உள்ள படி அக்ரஹாரத்தில் கல்யாணம் நடந்தது. கல்யாணம் முடிந்தவுடன் தம்பதிகளாக ஸ்ரீ மகாபெரியவாளிடம் சென்றோம். ஸ்ரீ மகாபெரியவா ஆசீர்வாதம் செய்து ஒரு பெரிய மாம்பழம் கொடுத்து இருவரும் சாப்பிடுங்கோ என்றார். நான் கல்யாணத்தின் முன்பே என் மனைவியிடம் நான் உன்னை கல்யாணம் செய்து கொள்கிறேன். ஆனால் நான் ஸ்ரீ மகாபெரியவாளோட தான் இருப்பேன். ஸ்ரீ மகாபெரியவா என்னை அனுப்புவா நான் வருவேன். உனக்கு சரியென்றால் கல்யாணம் செய்துகொள்ளலாம் என்றேன். அவளும் சரி என்றாள். ஸ்ரீ மகாபெரியவாளோட ஆசீர்வாதம், அருளுடன் எங்கள் கல்யாணம் நடந்தது. என் மனைவியின் பெயர் மீனாட்சி என் மனதை படித்த ஸ்ரீ மகாபெரியவா நீ என்னையும் பார்த்துண்டு உன் மனைவியையும் பார்த்துக்கோ என்றார். மாதம் ஒரு முறை என்னை ஊருக்கு அனுப்பிவைப்பார். அப்போது சம்பளமாக மூன்றுரூபாய். பக்தாளுக்கு நான் ஏதாவது உதவி செய்தால் அவர்கள் எனக்கு கொடுக்கும் பணத்தையும் சேர்த்து ஊருக்கு அனுப்பு என்பார். உனக்கு செலவுக்கு ஐந்தோ பத்தோ வைத்துக் கொண்டு மீதியை அவளிடம் கொடு. பிறகு அவளிடம் கணக்கு கேள் என்பார். உடனே ஸ்ரீ மகாபெரியவாளே "உன் மனைவி ஆமாம் நீங்க ஸ்ரீ மகாபெரியவாளோட இருக்கேள். நான் சரியாக தான் குடும்பம் நடத்தறேனா இல்லையானு கோபிச்சுப்போ" என்பார். அதை எல்லாம் அறிந்த ஸ்ரீ மகாபெரியவா. ஒரு நாள் என்னிடம் அஷ்டலட்சுமி படத்தை காண்பித்து இதில் உனக்கு எந்த இலட்சுமிடா பிடிக்கும் என்று கேட்டார். நானும் ஒரு இலட்சுமி குழந்தையை வைத்துக் கொண்டு

இருக்கும் படத்தை காண்பித்தேன். ஸ்ரீ மகாபெரியவா 'ஓகோ உனக்கு சந்தானலஷ்மி பிடிக்குமா?' என்று கேட்டார் சில மாதங்களுக்கு பிறகு தண்டையார் பேட்டையில் கேம்ப். ஸ்ரீ ஆதிசங்கரர் ஜெயந்தி. ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "நீ மேடை மீது ஏறி மக்களிடம் இப்போது ஸ்ரீ மகாபெரியவா "நம பார்வதி பதயே" என்பார் நீங்கள் "ஹரஹர மகாதேவா" என்று சொன்னபின் ஸ்ரீ மகாபெரியவா ஆதிசங்கரர் பற்றி உபன்யாசம் செய்வார். இங்கு இருப்பவர்களுக்கு எத்தனையோ முக்கிய விஷயங்கள் பேசணும்னு இருக்கும். பேசணும் என்றால் இந்த மதில் சுவருக்கு அந்தபக்கம் பேசிவிட்டு வந்து உட்காரவும் என்று சொல்லிவிடு" என்றார். உபன்யாசம் நடுவில் மானேஜர் என்னை கூப்பிட்டார். எனக்கு பெண் குழந்தை பிறந்திருப்பதாக கடிதம் வந்துள்ளது என்று சொன்னார். எனக்கு விருத்திதீண்டல். ஆதனால் நான் ஸ்ரீ மகாபெரியவா முன் செல்ல முடியவில்லை. ஸ்ரீ மகாபெரியவா "வேதபுரி எங்கே அவனைக்காணோம்" என்று கேட்டார் மற்றவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் சென்று வேதபுரிக்கு பெண் குழந்தை பிறந்திருப்பதாக தகவல் வந்துள்ளது என்று சொன்னார்கள். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா வேதபுரிக்கு சீமந்தபுத்திரி பிறந்திருக்காளா? மகாலஷ்மிடா அவள் ஸ்ரீ சங்கரஜெயந்தி அன்று பிறந்திருக்கா என்று சொல்லி எல்லோருக்கும் சர்க்கரைகொடு. பெண் குழந்தை என்றால் சர்க்கரை. பிள்ளை குழந்தை என்றால் கல்கண்டு கொடுக்கணும் என்றார். குழந்தை ஸ்ரீ சங்கரஜெயந்தி அன்று பிறந்திருப்பதால் சங்கரி என்று பெயர் வைக்கச்சொன்னார். இரண்டாவதும் பெண்குழந்தை பிறக்க நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் இரண்டாவதும் பெண்குழந்தை என்று அழுதேன். "எத்தனை பெண் குழந்தை பிறந்தாலும் நான் பார்த்துப்பேன்" என்று என்னை தேற்றினார்.

கும்பகோணத்தை சேர்ந்த புஷ்பத்தம்மா, அம்மாபொண்ணு இரண்டு பேரும் ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்தார்கள். இவர்கள் இருவரும் வியாசர்பூஜைக்கு எப்பவும் ஸ்ரீ மகாபெரியவா எங்கு இருக்கிறார்களோ அங்கு வருவார்கள். அவர்களுக்கு தனியாக குடிசைபோட்டு கொடுப்பா. அவ்வளவு பாக்கியசாலிகள். அவர்கள் ஸ்ரீ பெரியவாளிடம் நாங்கள் பத்ரிநாத் போக போவதாகச் சொன்னார்கள். "எப்படி யாரோட

போறேள்''–? என்று ஸ்ரீ மகாபெரியவா கேட்டார்கள். அவர்கள் பி.டி பாணி திருவல்லிக்கேணியில் இருக்கார் அவர்களுடன் போகிறோம் என்றார்கள். ''உங்களுக்கு துணைக்கு யாராவது வேணுமா?'' என்றார் ஸ்ரீ மகாபெரியவா. அவர்கள் நாங்கள் 100பேர் போறோம், அதனால் யாரும் துணைக்கு வேண்டாம் என்றார்கள். ஸ்ரீ மகாபெரியவாளும் ''அப்படினா சரி'' என்று சொல்லிவிட்டார்கள். அவர்களும் திரும்பிச்சென்று வாசல் தாண்டவில்லை, விழுந்து அடிபட்டுவிட்டது. உடனே, அவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்து எங்களை மன்னித்துவிடுங்கள். எங்களுடன் யாரையாவது அனுப்பி வையுங்கள் என்றார்கள். ஸ்ரீ மகாபெரியவா ''நீ முதலிலேயே கேட்டிருந்தால் நல்ல சாமர்த்தியமானவனை அனுப்பி இருப்பேன் இப்ப கேட்பதால் இந்த அசடை (வேதபுரி) கூட்டிண்டு போ'' என்று என்னை (வேதபுரி) அவர்களுடன் அனுப்பினார்கள். அவர்களிடம் ''நீங்களே செலவு செய்து இவனை கூட்டிண்டு போங்கோ'' என்றார். ''நீங்கள் இப்போது கும்பகோணம் சென்று தயார் செய்யுங்கள்'' என்று அனுப்பிவிட்டார். என்னையும் ''அப்பாவிடம் சொல்லிவிட்டு கும்பகோணம் போய் அவர்களுடன் பத்ரிநாத் போ'' என்று அன்பு கட்டளை இட்டார்கள். நானும் கும்பகோணம் போனேன். பிறகு தான் தெரிந்தது யாரும் பத்ரிநாத் போகவில்லை. பி.டி.பாணி டிக்கட் இல்லை என்று சொல்லி விட்டார்கள் என்று. நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் திரும்பவந்து விஷயத்தை சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா கோபித்துக்கொண்டு ''நான் உனக்கு தைரிய பிரசாதம் தரேன் (விபூதி, குங்குமம்) எடுத்துக்கொண்டு கும்பகோணம் போய் அவர்களுடன் பத்ரிநாத் போ'' என்று கூறிவிட்டார். நானும் கும்பகோணம் போய் அவர்களிடம் ஸ்ரீ மகாபெரியவாளோட உத்திரவு பத்ரிநாத் கிளம்புங்கோ என்று சொல்லி கிளம்பிவிட்டோம். டெல்லியில் திரு.சுவாமிநாதன் என்பவர் வந்து எங்களைகூட்டிச் சென்று எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார் ரிஷிகேஷில் திரு.சிவானந்தா சுவாமிகள் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்கள். பத்ரிநாத்தில் இரண்டு குதிரைகளை வைத்துக் கொண்டு பாட்டிகள் இருவரையும் அனுப்பிவிட்டு நான் ஒரு குச்சியை பிடித்துக்கொண்டு மேல் சென்று

பத்ரிநாதரை தரிசனம் செய்து திரும்பினோம். ஸ்ரீ மகாபெரியவாளை பார்த்து தரிசனம் செய்தோம். நான்கு சொம்பு கங்கை தீர்த்தம் கொடுத்தேன். ஸ்ரீ மகாபெரியவா "இதில் ஒன்று எனக்கு, ஒன்று உன் அப்பாவிற்கு, ஒன்று இராமேஸ்வரம் ஸ்ரீ ராமநாதஸ்வாமிக்கும், ஒன்று உங்கள் எல்லோருக்கும்" என்றார். இதன் பின் பிறந்தவன் மகன் அவனுக்கு பத்ரிநாராயணன் என்று பெயர் சூட்டினார். பின் சுபா என்ற பெண் குழந்தை பிறந்து 10 வயதில் டிப்தீரியா நோயால் இறைவன் அடி சேர்ந்து விட்டாள். பின் கண்ணன் என்று பிள்ளை குழந்தை பிறந்தது. ஸ்ரீ மகாபெரியவா அருளில் எல்லோரும் நன்றாக இருக்கிறார்கள்.

## பெரியபெண் கல்யாணம் : (சங்கரி)

ஒரு நாள் ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் இன்று ஏகாம்பரேஸ்வரர் கோயிலில் என்ன விசேஷம் என்றார். நான் ஏகாம்பரேஸ்வர, ஸ்ரீ காமாட்சி திருக்கல்யாணம் என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா "கோயிலில் எல்லோரும் கணபதியிடம் வேண்டிக்கொண்டு ஏகாம்பரேஸ்வரர், ஸ்ரீ காமாட்சி முன் தாலிகட்டி கல்யாணம் செய்து கொண்டுவிடுவார்கள் நீ பார்த்து இருக்கியோ?" என்றார். நானும் பார்த்திருக்கேன் என்று சொன்னேன். "இன்று" 'பங்குனி உத்திரம்' கல்யாணத்திற்கு உகந்தநாள். இன்று உன் பெண்ணிற்கு கல்யாணம்" என்றார். நான் இப்படி கல்யாணம் வேண்டாம். நகை சேர்க்கவில்லை பணமும் இல்லை என்றேன். மாப்பிள்ளை யார்? என்றும் ஸ்ரீ மகாபெரியவாளை கேட்டேன். "அவ்வளவு தானே கல்யாணம் நான் நடத்திவைக்கிறேன். இங்கே மடத்தில்" என்றார். திருவண்ணாமலைக்கு மடத்தின் சிப்பந்தியை அனுப்பி மாப்பிள்ளையை கூட்டிவரச் சொன்னார். எல்லோரும் வந்து, நான்கு நாட்கள் கல்யாணம் ரொம்ப நன்றாக நடத்திவைத்தார். பிறகு திரு.டெகான்மூர்த்தி மூலம் இவர்களுக்கு ஒரு வீடும் வாங்கிக் கொடுத்தார்.

*****

# இரண்டாம்பெண் கல்யாணம் : (கமலா)

கமலாவின் கல்யாணம் ஜாதகம் பார்த்து நடந்தது. நிறைய இடங்கள் ஜாதகம் பார்த்தும் தகையவில்லை. கவலைப்பட்டேன். ஸ்ரீ மகாபெரியவா "டேய் பெண்ணிற்கு கல்யாணம் என்றால் ஏழு செருப்பு தேயணும்டா" என்று கூறினார். பின் ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "விஷ்ணுபுரம் சென்று அம்பிஅய்யர் பெரிய மிராசுதார் அவரிடம் கமலாவின் ஜாதகத்தை கொடுத்துவிட்டு என்னிடம் திரும்பவந்துவிடு" என்று ஆசி கூறினார். நானும் அம்பி அய்யரிடம் ஜாதகத்தை கொடுத்தேன்.

அம்பி அய்யரோ நான் என்னடா செய்வேன்? என்றார். நான் எனக்குத்தெரியாது, ஸ்ரீ மகாபெரியவா உங்களிடம் நான்கு, ஐந்து ஜாதக காப்பி எடுத்து கொடுத்து அவரை பார்த்துட்டுவா என்று சொன்னார்கள் என்று சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்துவிட்டேன். அம்பி அய்யரின் காரியஸ்தரில் ஒருவர் திரு.ராமசந்திர சாஸ்திரிகளிடம் அம்பி அய்யர் இந்த ஜாதகத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னார் என்று கொடுத்தார். அப்போது திரு.ராமச்சந்திர சாஸ்திரிகள் பூஜை முடித்து கற்பூர ஆரத்தி காண்பித்துக் கொண்டிருந்தார். திரு.ராமசந்திர சாஸ்திரிகள் தன் பிள்ளைக்கே பொருந்துமா?என்று பார்க்க, ஜாதகம் நன்றாக பொருந்திருந்தது. உடனே திரு.ராமசந்திர சாஸ்திரிகள் அம்பி அய்யரின் மகன் திரு.கல்யாணம் அவர்களுடன் ஸ்ரீ மகாபெரியவாளை கலவையில் சென்று பார்த்தார். ஸ்ரீ மகாபெரியவா "என்னை எதற்கு பார்க்க வந்தீர்கள் ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளை பாருங்கோ" என்றார். இவர்கள் இல்லை உங்களிடம் கைங்கர்யம் செய்பவரின் மகள் ஜாதகம் என் பிள்ளை ஜாதகத்துடன் நன்றாக பொருந்தியிருக்கு, என்று சொன்னார்கள் ஸ்ரீ மகாபெரியவா "நானும் ஏழை இவனும் ஏழை. நான் குரு சன்னதியில் அமர்ந்துவிட்டேன்" என்று சொன்னார்கள். அதற்கு வந்தவர்கள் இல்லை ஸ்ரீ மகாபெரியவாளுக்கு தெரியாதது ஒன்றுமில்லை என்றனர். ஸ்ரீ மகாபெரியவா "அப்படியா சரி" ஊரில் போய் பெண்ணை பார்த்து பிடித்திருக்கானு சொல்" என்று என்னையும் அவர்களுடன் ஸ்ரீ மகாபெரியவாளை தரிசிக்க வந்த ஒரு பக்தரின்

காரில் எசையனூர் அனுப்பிவைத்தார். பெண் கமலா பள்ளிக்கூடம் சென்றிருந்தாள். எட்டாவது படித்துக் கொண்டிருந்தாள். கன்னியாக்குழந்தை. இவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்து எங்களுக்கு பெண் பிடித்துவிட்டது என்று சொன்னார்கள் ஸ்ரீ மகாபெரியவா அவர்களிடம் பையனை வரச்சொல்லி பெண் பிடித்து இருக்கானு கேட்டார். பையனும் பெரியவா சொன்னால் போதும் என்று சொன்னார். ஸ்ரீராமநவமிக்குள் கல்யாணம் முடிந்தால் நன்றாக இருக்கும் என்றும் சொன்னார்கள். ஸ்ரீ மகாபெரியவா வந்தவர்களிடம் "சரி நீங்கள் உங்கள் குடும்பத்தாரிடம் கலந்து ஆலோசித்து கல்யாணம் செய்யுங்கள்" என்றார். நான் கல்யாணத்துக்கு செலவுக்கு பணம் இல்லை என்று கவலைப்பட்டேன் ஸ்ரீ மகாபெரியவா டாக்டர்.விழிநாதன் என்பவரை கூப்பிட்டு நான் கொஞ்சம் பணம்தரேன். உன் அப்பா திரு அம்பி அய்யர் "கன்னியாதானம்" என்ற பெயரில் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்துள்ளார். அதையும் சேர்த்து, இந்த கல்யாணத்துக்கு செலவு செய். பின் எல்லா கணக்கும் எனக்கு சொல்" **"இது வேதபுரிக்கு தெரியவேண்டாம்"** என்றும் சொன்னார். கன்னியாதான பணம் என்பது எப்போதோ திரு.அம்பி அய்யர் ஏதோ ஒரு கல்யாணத்தின் போது கன்னியாதானத்துக்கென்று பணம் சேர்த்து. அதை அவரே மறந்து விட்டார். இதை ஸ்ரீ மகாபெரியவா அவருக்கு நினைவு படுத்தினார்கள். கல்யாணம் விஷ்ணுபுரத்தில் நடந்தது. அம்பி அய்யரின் மனைவி என்னிடம் "விழிநாதன்" சுவாமிக்கு (விஷ்ணுபுரத்தில் உள்ள பகவான்) ஒரு சின்ன அரளி மாலையாவது சாத்தரேனு வேண்டிக்கோ பின்னால் உன்னால் முடிந்தால் ரோஜாமலையோ, மல்லி மாலையோ போடு. உனக்கு ஸ்ரீ மகாபெரியவாளோட ஆசீர்வாதமும் இருக்கு என்று சொன்னார். நான் இதை ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவாளும் "ஆமாண்டா நானும் மறந்துவிட்டேன் கட்டாயம் பகவானுக்கு செய்" என்றார். கல்யாணம் திரு.அம்பி அய்யர் வீட்டில் விமரிசையாக நடந்தது. டாக்டர்.விழிநாதன், திரு.எம்.எஸ்.சுப்புலட்சுமி இன்னும் சில பக்தர்களின் தயவாலும் ஸ்ரீ மகாபெரியவாளின் அருள், ஆசியுடனும் கல்யாணம் நன்றாக நடந்தது. ஸ்ரீ மகாபெரியவா

தன்னிடம் இருந்த ஒரு பெரிய வில்வபழத்தை உடைத்து அதில் குங்குமப்பூ வைத்து மூடி அதன்மீது ஏலக்காய் பொடியை சிறு பொட்டலமாக கட்டி திரு.பாலு, திரு.ஸ்ரீகண்டன் இருவரிடமும் கொடுத்து, கல்யாணத்தில் இதை ஜூஸ் செய்து எல்லோருக்கும் கொடு என்று சொல்லி கொடுத்தனுப்பினார்கள். ஜூஸ் எல்லோருக்கும் விநியோகம் செய்யப்பட்டது. ஸ்ரீ மகாபெரியவாளின் பக்தர்கள் வில்வஓட்டை கூட விட்டுவைக்கவில்லை. ஸ்ரீ மகாபெரியவா பிரசாதம் என்று எடுத்து வைத்துக்கொண்டார்கள். ஸ்ரீ மகாபெரியவாளின் உத்தரவு படி அந்த கிராமத்தில் இருந்த 100 வீடுகளுக்கும் சாப்பாடு போடப்பட்டது. ஸ்ரீ மகாபெரியவா மாப்பிள்ளைக்கு தான் உபயோகித்து கொண்டிருந்த டிரான்ஸ்சிஸ்டர் ரேடியோவை அன்பளிப்பாக கொடுத்தார். இவை அனைத்தும் அந்த கருணாமூர்த்தியின் ஸ்ரீ மகாபெரியவாளின் கருணை என்று சொல்லாமல் என்ன சொல்வேன்.

## பத்ரி நாராயணனின் பூணல்

மடத்தில் திரு.சேஷாத்திரி சாஸ்திரிகள் ஏஜெண்டாக வேலை பார்த்தார். அவருக்கு 60வது கல்யாணமா 80வது கல்யாணமா என்று நினைவு இல்லை. "இந்த கல்யாணத்தில் உன் மகன் நாராயணனுக்கு பூணல் போடு" என்றார் ஸ்ரீ மகாபெரியவா. நான் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்றேன். ஸ்ரீ மகாபெரியவா "உக்ராண காரரை கூப்பிட்டு (மாப்பிடி மாலி) ஏஜெண்ட் கல்யாணத்துக்கு என்ன செய்யாரரோ அதே போல நாராயணின் பூணுலுக்கும் செய்" என்று சொன்னார். என்னிடம் ஒரு மூட்டை தேங்காயும் கொடுத்து "இதை ப்ரமோபதேசம்" ஆனதும் எல்லா வைதீகர்களுக்கும் ஒரு தேங்காய் அதன்மேல் 5ரூபாய் வைத்துகொடு" என்று சொன்னார். நான் கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருந்தேன் அதையும் ஸ்ரீ மகாபெரியவா உதவியுடன் நல்லபடியாக செலவு செய்து பூணலையும் நன்றாக நடத்தினேன். நான் நடத்தினேன் என்று சொல்வது ரொம்ப தப்பு. ஸ்ரீ மகாபெரியவா நன்றாக நடத்திக் கொடுத்தார். என்பது தான் சரி. உத்தமம்.

# கண்ணனின் பூணல்

ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் “நீ எல்லோரோட கல்யாணம், பூணல் எல்லாம் இங்கேயே செய்துட்ட அதனாலே கண்ணனின் பூணலை உன் கிராமத்தில் (எசையனூர்) செய். எல்லோருக்கும் பழம், வெத்தலை, பாக்கு கொடு என்று சொன்னார். அவர் அருளில் பூணலும் நன்றாக நடந்தது.

கண்ணனுக்கு மேல்படிப்பு படிக்க ஆசை. படிப்புக்கோ கல்லூரியில் 50,000 ரூபாய் கட்ட சொல்கிறார்கள். நான் என்ன செய்வேன். எனக்கு ஸ்ரீ மகாபெரியவாளை தவிர யாரையும் தெரியாது. ஸ்ரீ மகாபெரியவாதான் எனக்கு தாய், தந்தை, குரு, தெய்வம். அவரிடம் சொல்லி அழுதேன். ஸ்ரீ மகாபெரியவா “ஏன் அழறே”” கல்லூரி படிப்பு என்பது சும்மாவாடா? தைரியமாக இரு என்று சொன்னார்கள். அப்போது யாரோ பெரிய பணக்காரர் பெயர் தெரியவில்லை, ஸ்ரீ மகாபெரியவாளிடம் பணம் வைத்து எடுத்துக்கச் சொன்னார். ஸ்ரீ மகாபெரியவா எனக்கு எதற்கு பணம் வேண்டாம்” என்றார். வந்தவரோ நீங்கள் எனக்கு அள்ளி அள்ளி கொடுக்கிறீர்கள், இதில் கொஞ்சமாவது எடுத்துக்கக்கூடாதா என்றார். பக்கத்தில் இருந்த என்னை கூப்பிட்டு இதை எடுத்து கல்லூரியில் கட்டு என்றார். என்ன ஆச்சர்யம் பணம் சரியாக ரூபாய் 50,000 இருந்தது.

ஸ்ரீ மகாபெரியவா கருணாமூர்த்தி, சர்வவியாபி, காமதேனு, கற்பகவிருட்சம் என்பதை உணர்த்த இதைவிட வேறு சம்பவம் வேண்டுமா?

*****

ஸ்ரீ மகாபெரியவா காஞ்சிபுரத்தில் உள்ள பங்காரு தோட்டத்தில் ஸ்ரீ ப்ரம்மஸ்ரீ மாமா (வேதபுரி) ஸ்ரீ கண்டன், கிருஷ்ணராஜபுரம் ராமமூர்த்தி சாஸ்திரிகளுக்கு வீடுகட்டிக் கொடுத்தார்.

பங்காரு தோட்டம் என்பது எப்படி வந்தது என்றால் அந்த இடத்தில் உள்ள பூக்களால் ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ பங்காரு காமாட்சிக்கு

அர்ச்சனை செய்வார். அதனால் பங்காரு தோட்டம் என அழைக்கப்பட்டது. பின் அந்த இடம் பங்காரு காலணி என்று மாற்றப்பட்டது. பின் திரும்பவும் பங்காரு தோட்டம் என மாற்றப்பட்டது.

ஸ்ரீ மகாபெரியவா வீடுகட்டி கொடுத்தார் என்பதை தவறாக எண்ணவேண்டாம். ஸ்ரீ மகாபெரியவா ஏஜெண்டு மூலம் கிடைத்த சிறிய இடத்தை வாங்கி அதை சிறிய இரண்டு அறைகளாக செய்து மூன்று பேருக்கும் பங்கிட்டு கொடுத்தார். மொத்தம் (ஆறு அறைகள்) பின் உங்கள் சாமர்த்தியம், உழைப்பால் பெரியதாக கட்டிக்கொள்ளுங்கள் என்று சொன்னார். நான் ஊரில் எனக்கு இருந்த நிலம், வீட்டை விற்று இங்கு கொஞ்சம் விரிவுபடுத்தி கட்டிக்கொண்டேன். ஸ்ரீ மகாபெரியவாளின் ஆசீர்வாதத்துடன் வீட்டை காஞ்சிபுரத்தில் இருந்த கொல்லாசத்திரம் இஞ்ஜினியர் கோபால அய்யர் அவர்கள் கட்டி கொடுத்தார்.

## பங்காரு தோட்டத்தில் ஸ்ரீ பிரதோஷமாமாவிற்கு வீடு கிடைத்த கதை.

ஸ்ரீ வெங்கட்ராமய்யர் என்பவர் இரயில்வே துறையில் வேலைபார்த்து வந்தார். இவர் ஒவ்வொரு பிரதோஷத்திற்கும் ஸ்ரீ மகாபெரியவாளை எங்கிருந்தாலும் சென்று தரிசனம் செய்வார். ஸ்ரீ மகாபெரியவாளிடம் அவர் கொண்டிருந்த அன்பும், பக்தியும் சொல்லி முடியாது. தன்னை ஸ்ரீ மகாபெரியவாளின் மீளா அடிமை என்று சொல்வார். இவரைப்பற்றி தெரியவேண்டும் என்றால் ''தந்தது உன் தன்னை கொண்டது என் தன்னை'' என்ற புத்தகத்தை படிக்குமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள் இவருக்கு ஒரு மகள் திருமணம் ஆகிவிட்டது. இரண்டு உடம்பு ஸ்வாதீனம் இல்லாத குழந்தைகளும் இருந்தனர். ஸ்ரீ மகாபெரியவா இந்த குழந்தைகள் ரிஷிகள் என்று கூறியிருக்கிறார். இவர் இரயில்வே துறையிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார். சொந்தவீடு கிடையாது. என்ன செய்வார்? ஸ்ரீ மகாபெரியவா தன்னிடம் அடைக்கலம் என்று வந்தவர்களை கைவிடமாட்டார் என்பது உலகறிந்த உண்மை. பிரதோஷமாமாவை காப்பாற்றினார்.

ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீகண்டன் மாமாவை கூப்பிட்டு "நீயோ ப்ரம்மச்சாரி நான் உனக்கு கொடுத்த வீட்டை திரும்ப கேட்பது தப்பு. ஆனால் என்னை நம்பி இருக்கும் ப்ரதோஷ வெங்கட்ராமனுக்கு கொடுக்க முடியுமா? நான் உன்னை பார்த்துக் கொள்கிறேன் என்றார். பிரதோஷ மாமாவிற்கு வீடு கிடைத்தது. அவர் ஓய்வு பெற்று வந்த பணத்தையும் போட்டு அந்த விட்டில் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு சின்னதாக ஒரு கோயிலும் கட்டினார். இப்பவும் ஸ்ரீ மகாபெரியவாளின் நஷத்திரம் அனுஷம் கொண்டாடப்படுகிறது. ஸ்ரீகண்டன் மாமா ஸ்ரீ மகாபெரியவாளிடம் கைங்கர்யம் செய்து வந்தார். அவர் வாழ்நாளில் கடைசி இரண்டு வருடம் முன் சன்னியாசம் வாங்கிக்கொண்டு சித்தி அடைந்தார். கிருஷ்ணராஜபுரம் ராமமூர்த்தி சாஸ்திரிகள் வேதாந்தியாணம் பண்ணினவர். இவரின் அப்பா திரு.ரத்னாஜலகனபாடிகள் மகன் திரு.சந்திரசேகரகனபாடிகள் இப்பொழுது ஐம்பது குழந்தைகளுக்கு குரோம்பேட்டையில் சங்கர்லால் ஜெயின் தெருவில் உள்ள சங்கரமடத்தில் வேதபாடம் சொல்லித்தருகிறார். திரு.ராமமூர்த்தி மாமா என்பவர் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு பிட்ஷை செய்து கொடுத்தவர்.

## பாலு மாமா

பாலுமாமா இராயபுரத்தை சேர்ந்தவர். படித்தவர். வேலையில் இருந்தவர். இவர் முதலில் நவராத்திரி சமயத்தில் பிட்ஷாவதனம் செய்து வந்தார். அடிக்கடி ஸ்ரீ மகாபெரியவாளின் தரிசனத்தில் ஈர்க்கப்பட்டு மடத்திலேயே சேர்ந்து விட்டார். பிரம்மச்சாரி. ஸ்ரீ மகாபெரியவாளுக்கு கைங்கர்யம் செய்து வந்தார். இப்போதும் ஸ்ரீ மடத்தில் அவருக்காக கொடுக்கப்பட்ட ஒரு அறையில் இருந்துகொண்டே இப்பவும் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு பூஜை செய்து வருகிறார்.

*****

ஒரு சமயம் ஒரு அம்மா வந்து என் பெண்ணிற்கு கல்யாணம். திருமாங்கல்யம் செய்யணும் பணம் இல்லை என்று அழுதாள். ஸ்ரீ மகாபெரியவா "ஸ்ரீ காமாட்சி கோயில் காமாட்சியை தரிசனம் செய்துவிட்டு வா" என்று சொன்னார். அந்த அம்மையாரும் கோயில் சென்றார்கள். கோயிலை வலம் வரும்போது அந்த அம்மாளுக்கு ஒரு திருமாங்கல்யம் கிடைத்தது. அதை எடுத்துக்கொண்டு ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்து இந்த திருமாங்கல்யம் நான் கோயிலை வலம் வரும்போது கீழே கண்டு கிடைத்தது என்று ஸ்ரீ மகாபெரியவாளிடம் கொடுத்தார். அப்போது ஸ்ரீ மகாபெரியவா "இதை இங்கே வைத்துவிடு உனக்கு நான் வேறு திருமாங்கல்யம் வைத்திருக்கேன்" என்று சொன்னார். அந்த சமயம் ஸ்ரீ மகாபெரியவாளிடம் ஒரு பக்தர் இரண்டு திருமாங்கல்யம் கொடுத்து ஒன்று என் குழந்தைக்கு மற்றொன்று உங்களுக்கு என்று சொன்னார். ஸ்ரீ மகாபெரியவா "எனக்கு எதற்கு? நான் பிச்சைகாரண்டா" என்றார். அந்த பக்தர் இல்லை இதை உங்களிடம் வரும் பக்தர்களுக்கு வேண்டும் என்றால் கொடுக்கலாமே என்றார் பவ்யமாக. ஸ்ரீ மகாபெரியவாளும் அதை தன்னிடம் வைத்துக் கொண்டார். அந்த திருமாங்கல்யத்தை இந்த அம்மாளிடம் கொடுத்துவிட்டு "நீ கண்டெடுத்த திருமாங்கல்யத்தை இங்கே என் முன் இங்கே வைத்துவிடு" என்றார். சில நிமிடங்களில் ஒரு அம்மா அழுதுகொண்டே ஸ்ரீ மகாபெரியவாளிடம் நான் காமாட்சியை வலம் வரும்போது என் திருமாங்கல்யம் தொலைந்துவிட்டது என்று கதறினார். ஸ்ரீ மகாபெரியவா "இதுவா என்று பார்" என்று கண்டெடுத்த திருமாங்கல்யத்தை காட்ட அந்த அம்மாளும் ஆமோதித்து பெற்று கொண்டார். இந்த சம்பவம் படிப்பவர்களை மெய்சிலிர்க்க வைக்கும்.

திருச்சி நேஷனல் காலேஜில் நடந்தது. ஸ்ரீ மகாபெரியவா அங்கு தங்கியிருந்தார். ஸ்ரீ மகாபெரியவா பூஜை முடித்து எல்லோருக்கும் தீர்த்தம் கொடுத்து கொண்டிருந்தார். அப்போது ஒரு பெண்மணி மற்றொரு பெண்மணியின் கழுத்தில் இருந்த திருமாங்கல்யத்தை திருடிவிட்டாள் இதை ஸ்ரீ மகாபெரியவா பார்த்து விட்டார். திருடிய

அந்தப்பெண் ஸ்ரீ மகாபெரியவாளிடம் தீர்த்தம் வாங்க கை நீட்டினாள். ஸ்ரீ மகாபெரியவா "உனக்கு இன்று தீர்த்தம் கிடையாது. உன் மடியில் இருக்கும் திருமாங்கல்யத்தை இங்கு வை. உன் மனது சுத்தமான பிறகு வா" என்று அனுப்பிவிட்டார். சில சமயத்திற்கு பிறகு திருமாங்கல்யத்தை பறி கொடுத்த பெண்மணி ஸ்ரீ மகாபெரியவாளிடம் கைநடுங்க தீர்த்தம் கேட்டார். அழுதுகொண்டே இருந்தாள். ஸ்ரீ மகாபெரியவா "ஏன் உன் கை நடுங்குகிறது? உடம்பு சரியில்லையா?" என்றார் பாசமாக. அந்தப்பெண்மணி அழுதுகொண்டே என் திருமாங்கல்யத்தை யாரோ திருடிவிட்டார்கள் என்றாள். ஸ்ரீ மகாபெரியவா "அழாதே உன் திருமாங்கல்யம் இங்கே இருக்கு. உன் கணவர் இங்கு இருந்தால் கூப்பிடு" என்று சொன்னார். கணவரும் வந்தார். "நான் இதில் குங்குமம் போடுகிறேன் இந்த திருமாங்கல்யத்தை இவள் கழுத்தில் கட்டு" என்று சொன்னார். ஸ்ரீ மகாபெரியவாளின் முன்னே திரும்பவும் அந்த பெண்மணியின் கழுத்தில் திருமாங்கல்ய தாரணம் நடந்தது. ஸ்ரீ மகாபெரியவா அவர்களை ஆசீர்வதித்து "நன்றாக இருப்பீர்கள்" என்று கூறினார்.

*****

**கங்காஸ்நானம் என்றால் என்ன? என்று நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் கேட்டேன். ஸ்ரீ மகாபெரியவா சொன்ன விளக்கம்:**

"தீபாவளி அன்று விடியற்காலை 4மணி முதல் 6மணிக்குள் எண்ணெய் தேய்த்து வெந்நீரில் குளிக்க வேண்டும். எண்ணெயில் ஸ்ரீ லக்ஷ்மியும், வெந்நீரில் கங்கையும் இருக்கிறார்கள் என்றார். தீபாவளி அன்று வெந்நீரில் கங்கை வருவதால் நாம் தீபாவளி அன்று கங்காஸ்நானம் ஆச்சானு? எல்லோரையும் கேட்கிறோம் என்றார்.

நான் தீபாவளிக்கு ஊருக்கு போகவில்லை. ஸ்ரீ மகாபெரியவாளிடமும் கேட்கவில்லை. எனக்கு அவரைவிட்டு விலக மனமில்லை. அப்போது என் மனைவி இரண்டு குழந்தைகளுடன் கிராமத்தில் இருந்தாள். அவள் நான் தீபாவளிக்கு வருவேன் புது ஆடைகள், பட்டாசு, வாங்கி வருவேன் என்ற எதிர்பார்ப்பில்

இருந்தாள். நான் தீபாவளிக்கு போகவில்லை. ஆனால் என் உம்மாச்சி என்னை கூப்பிட்டு நாளைக்கு விடியலில் தீபாவளி, நீ ஏன் ஊருக்கு போகவில்லை? என்று கேட்டார். நான் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். ஆனால் ஸ்ரீ மகாபெரியவா என்னை "நீ இப்பவே ஊருக்கு போய் உன் மனைவி குழந்தைகளோடு தீபாவளி கொண்டாடி விட்டு வா" என்று அன்பு கட்டளை இட்டதுமில்லாமல் புதுப்புடவை, குழந்தைகளுக்கு பட்டாசு, புஸ்வானம் கொடுத்து என்னுடன் மடத்தில் இருக்கும் ஒரு சிப்பந்தியையும் துணைக்கு அனுப்பினார். இரவு 12 மணி இருக்கும் நான் என் வீட்டில் கதவை தட்டினேன். என் மனைவி கதவை திறக்கவில்லை. திரும்பவும் தட்டினேன் அவள் திருடன் என்று பயந்து யார்? யார்? என்று கேட்டுக் கொண்டே இருந்தாள் கதவை திறக்கவில்லை. நான் வெளியிலிருந்து நான்தான் வந்திருக்கேன் ஜன்னலை திறந்து பார்த்து பின் கதவைத்திற என்றேன் பிறகு அவள் கதவைத் திறந்தாள். ஆனால் கோபம் பேசவில்லை. சிறிது நேரம் சென்றபின் என் மனைவி நீங்கள் ஸ்ரீபெரியவா என்று எப்பவும் ஸ்ரீ மடத்தில் ஸ்ரீ பெரியவாளோட இருக்கிறீர்கள். பொழுது விடிந்தால் தீபாவளி என்ன செய்வது என்று தெரியவில்லை என்றாள். நான் என் மனைவியிடம் கோபிக்காதே 'உம்மாச்சி' என்னெல்லாம் கொடுத்து இருக்கிறார் பார் என்று அவளிடம் ஸ்ரீ மகாபெரியவா கொடுத்தனுப்பியதை காட்டினேன். அவளும் குழந்தைகளும் மிகவும் சந்தோஷப்பட்டார்கள். எப்படி என் தாய் என்னை காப்பாற்றுகிறாள் என்று நான் ஸ்ரீ மகாபெரியவாளை நினைத்து ஆனந்தம் கொண்டேன்.

*****

ஒரு முறை ஒரு தம்பதியர் வந்து குழந்தை பாக்கியம் வேண்டி ஸ்ரீ மகாபெரியவாளை வேண்டினார்கள். கல்யாணம் ஆனதும் குழந்தை பிறக்கவேண்டும் என்பது கட்டாயம். ஆண் குழந்தையோ, பெண் குழந்தையோ பிறக்க வேண்டும். ஏன் என்றால் நம் வம்சவிருத்திக்கும், நாம் போன பிறகு நம்மை கரைசேர்க்கவும் நாம் பித்ரு சாபத்திலிருந்து விமோசனம் அடையவும் வேண்டும் என்றார்.

பின் அந்த தம்பதியரிடம் தினம் ஒரு அத்திப்பழம்

(பக்குவப்படுத்தியது) கொஞ்சம் பால் சுவாமிக்கு விளக்கேற்றி நைவேத்தியம் செய்து சாப்பிட சொன்னார்கள். 48 நாட்கள் செய்ய வேண்டும் என்றார். தம்பதிகளுக்கு குழந்தைபாக்கியம் கிடைத்ததில் சந்தேகமில்லை.

அரசமர பிரதட்சணமும் பலன் கொடுக்கும். அரசமரம் பக்கத்தில் இல்லையென்றால் காலை 10மணிக்குள் வீட்டில் குத்துவிளக்கு ஏற்றி 12 பிரதட்சணம் செய்து வர (48 நாட்கள்) நல்லது உண்டு என்றார்.

*****

மற்ற சிஷ்யர்கள் என்னை ரொம்ப கேலி செய்து கொண்டிருந்தனர். நான் எதுவுமே சொல்லவில்லை. இதை கவனித்துக் கொண்டிருந்தார் ஸ்ரீ மகாபெரியவா. பின் ஸ்ரீ மகாபெரியவா ஏன் அவனை கிண்டல் செய்கிறீர்கள். அவன் யார் தெரியுமா? 18 தலைமுறைக்கு முன் இவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு கைங்கர்யம் செய்து வந்தனர். மடத்தில் சாப்பிடமாட்டார்கள் அவர்கள் வீட்டில் சாப்பிடுவார்கள் அப்படிப்பட்ட தலைமுறையில் வந்தவன். நீங்கள் காவேரி நீர் குடித்து வளர்ந்தவர்கள் சாமர்த்தியசாலி. இவன் என்னிடம் எட்டுவயது முதல் இருக்கான். இவனுக்கு என்னை தவிர வேறு உலகம் தெரியாது. இவனும் சமர்த்தாக வளருவான் என்று கூறி என்னை சமாதானப்படுத்தினார். இவர் என் தாய் அல்லவா! நான் ஏன் ஸ்ரீ மகாபெரியவாளை தாயுமானார் என்று சொல்கிறேன் என்றால் எனக்கு எந்த சொந்தமும் தெரியாது. ஸ்ரீ மகாபெரியவா என் சொந்தங்களை எனக்கு அறிமுகப்படுத்தினார். எனக்கு சாமர்த்தியமாக முதலில் போய் சாப்பிட தெரியாது. பசி என்று போனால் ஒன்றும் இருக்காது. இதை அறிந்து ஸ்ரீ மகாபெரியவா என்னை கூப்பிட்டு மேனாவில் இருக்கும் பழத்தை கொடுத்து சாப்பிடச் சொல்லி, என் டம்ளரை கொண்டு வரச்சொல்லி அதில் "நான் பால் தரேன் சாப்பிடு" என்று சொல்வார். ஒரு குழந்தையின் பசி அறிந்து பால், சாப்பாடு கொடுப்பவள் தாய் தானே. தான் சாப்பிடாமல் குழந்தைக்கு கொடுத்து அதை பார்த்து சந்தோஷப்படுபவள் தாய் தானே. இப்போது புரியும் ஸ்ரீ மகாபெரியவா தாயும் ஆனார் என்று.

ஒரு முறை ஸ்ரீ மகாபெரியவா அனுமான் சாலிசா படித்துக் கொண்டிருந்தார். நான் உடம்பு களைப்பாக இருந்ததால் பக்கத்து அறையில் படுத்துவிட்டேன். ஸ்ரீ மகாபெரியவா வேதபுரி எங்கே? என்று மற்றவர்களிடம் கேட்டார். அவர்கள் அவன் பாம்பே போய்விட்டான். வருவான் என்று கிண்டல் செய்தார்கள். ஸ்ரீ மகாபெரியவா எனக்குத் தெரியும் "வேதபுரி நல்லபுரி இங்கே வா" என்று என்னை கூப்பிட்டார்கள். இது ஒரு தாய் தன் குழந்தையை மற்றவர்கள் கிண்டல் செய்யவிடமாட்டாள் என்பதை காட்டுகிறது.

ஸ்ரீ மகாபெரியவாளை சில முக்கியஸ்தர்கள் தரிசனம் செய்ய வருவார்கள். அந்த சமயத்தில் என்னை மற்ற சிஷ்யர்கள் ரொம்ப வேலை செய்ய சொல்வார்கள்.புகைப்படம் எடுக்கும் சமயத்தில் என்னை நான் புகைப்படத்தில் இருக்ககூடாது என்பதற்காக பாத்திரம், தட்டு கொண்டுவா என்று சொல்லி என்னை அங்கிருந்து விலகச் செய்வார்கள். இதை பலமுறை ஸ்ரீ மகாபெரியவா கவனித்து வந்தார். ஒரு முறை ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "நீ என்னுடன் புகைப்படத்தில் இல்லையேனு வருத்தப்படாதே என் மனசில் நீ எப்பவும் இருக்கே" நான் உன்னை பார்த்துப்பேன்" என்றார். நான் செய்த பாக்கியம் வேறு என்ன சொல்ல.

ஒரு நாள் நான் காலை சுவாமி அறையில் பாரா இருந்தேன். அப்பொழுதுதெல்லாம் இரவு பூஜை முடிந்தவுடன் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரரை பட்டுத் துணியில் மூடி வைப்பார்கள். ஒருவர் மாற்றி ஒருவர் பாராவில் இருப்போம். காலை நான்கு மணிக்கு ஸ்ரீ மகாபெரியவா குரல் கொடுத்தார். "யார் இப்போது பாராவில் உள்ளது" என்றார். நான் நான்தான் வேதபுரி இருக்கேன் உம்மாச்சி என்றேன். ஸ்ரீ மகாபெரியவா நான் உனக்கு ஒரு வேலை தரேன் செய்யறயா? என்றார் அன்பான குரலில். சொல்லுங்கோ செய்யறேன் என்றேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா அழகான குரலில் பாடினார் "வேதபுரி வேதபுரி இந்த கட்டை விளக்கில் நாலு திரி போட்டு எண்ணெய் ஊற்றி விளக்கேத்தி வை வேதபுரி" என்று பாடினார். எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. அங்கிருந்த மற்ற பாரா பார்ப்பவர்களும் "சுவாமி ரொம்ப நல்ல பாடுகிறாரே, உங்களைப் பற்றி பாட நீங்கள் ரொம்ப கொடுத்து வைத்தவர் என்றார்கள். ஒரு தாய்

தன் குழந்தையை அந்தக் குழந்தையின் முன்பே பெருமையாக பேசுவது என்பது ரொம்ப சந்தோஷமான விஷயம் அல்லவா.''

*****

பண்டரிபுரத்தில் ஸ்ரீ மகாபெரியவா வியாசர் பூஜைக்காக இருந்த சமயம். சந்திரபாகாவின் அடுத்த கரையில் இருப்பவர்கள் ஆற்றை கடந்து வந்துதான் ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்ய வேண்டும். ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்ய பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். படகோட்டியின் கையில் பணம் சேர ஆரம்பித்தது. படகின் சொந்தக்காரர் படகோட்டியிடம் எப்படி இவ்வளவு பணவரவு என்று கேட்டான். அவன் ஸ்ரீ மகாபெரியவா வந்திருக்கிறார்கள் என்றான். படகோட்டியும் சில நாட்கள் கழித்து ஸ்ரீ மகாபெரியவாளின் தரிசனத்திற்கு வந்தான். ஸ்ரீ மகாபெரியவா அவனிடம் ''நீ தான் குகனா'' என்று கேட்டார். உன் எஜமானனிடம் சொன்னாயா? என்றும் கேட்டார். அவன் நான் படகோட்டி தான் நீங்கள் வந்திருப்பதாக என் எஜமானிடம் சொல்லிவிட்டேன். என்றார். ஸ்ரீ மகாபெரியவாளும் அவனிடம் நான் உன் எஜமானனை விசாரித்ததாக சொல்லு என்று சொன்னார். சில நாட்களுக்கு பிறகு படகின் எஜமானன் ஸ்ரீ மகா பெரியவாளை தரிசனம் செய்ய வந்தான். ''நீ தான் குகனா'' என்று ஸ்ரீபெரியவா அவனிடம் கேட்டார். அவன் ஸ்ரீ மகாபெரியவாளை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, ஸ்ரீ மகாபெரியவா என் படகில் ஸ்ரீ பாண்டுரங்களை தரிசனம் செய்ய வரவேண்டும் என்று கேட்டான். ஸ்ரீ மகாபெரியவா இப்போது வியாசர் பூஜை, பூஜை முடியட்டும் வரேன் என்று சொன்னார். வியாசர் பூஜை முடிந்தவுடன் ஸ்ரீ மகாபெரியவா கிளம்பும் போது அந்த படகின் எஜமான் படகை முழுவதுமாக கழுவி சுத்தம் செய்து கோலம் போட்டு வாழைமரம், மாவிலை தோரணம் கட்டி ஸ்ரீ மகாபெரியவாளை அழைத்து சென்ற விதம் கண்கொள்ளா காட்சி, நான் அனுபவித்த காட்சி.

*****

என் வயது 17 இருக்கும். கட்டளை ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகள் இரண்டு கண்ணும் தெரியாதவர். எண்பது வயது. அவர்

ஸ்ரீ மகாபெரியாவளை தரிசனம் செய்ய வந்தார். ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்கரித்து ஸ்ரீ மகாபெரியவாதான் "நாராயணன்" என்று சொன்னார். என்னை நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும் என்றார். "ஆணை தாண்டவபுரத்தில் காமுபாட்டி என்பவர் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு அக்ரஹாரத்தில் உள்ள மற்றவர்களையும் சேர்த்துக் கொண்டு நெல் இல்லாத பொறி சேர்த்து மூட்டையாக கட்டி பக்தாளிடம் கொடுத்தனுப்புவார். அவர்களுக்கு பாட்டி கூலியும் கொடுப்பார். மடத்தில் சாப்பாடு கொடுப்பார்கள். அந்த பாட்டியிடம் ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ கிருஷ்ணநந்த சுவாமிகளை பார்த்துக் கொள்ளும்படியும் அந்த ஊரில் உள்ள மடத்தில் தங்கவும் உத்தரவு செய்தார். பாட்டியும் கொஞ்ச நாட்கள் ஸ்ரீ கிருஷ்ணநந்த சுவாமிகளுக்கு கைங்கர்யம் செய்து வந்தார். சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ மகாபெரியவாளிடம் என்னால் முடியவில்லை என்று கூறிவிட்டார். ஸ்ரீ மகாபெரியவா மடத்தில் உள்ளவர்களிடம் ஸ்ரீ கிருஷ்ணநந்த சுவாமிகளை கவனித்துகொள்ள முடியுமா? என்று கேட்டார். எல்லோரும் முடியாது என்று சொல்லிவிட்டார்கள். ஸ்ரீ மகாபெரியவா என்னை கூப்பிட்டு "நீ போ" என்றார். நான் எனக்கும் தகப்பனார் இருக்கா என்று சொன்னேன். "ஏன்? உன் தம்பி பார்த்துக்க மாட்டானா"–? சரி உன் தகப்பனார், தம்பி இருவரையும் என்னிடம் அனுப்பிவிட்டு நீ போய் ஸ்ரீ கிருஷ்ணநந்த சுவாமிக்கு கைங்கர்யம் செய் என்று சொன்னார். அங்கு நூறு வீடுகள் உள்ளது. தினம் ஒரு வீடு என்று பிட்க்ஷை எடுத்து அதுவும் ரேழி முன்னாலிருந்து கூப்பிடவேண்டும். "பவதி பிட்ஷாந்தேகி" என்று கூப்பிடு என்று சொன்னார் (ப்ரம்மச்சாரிகள் பிட்க்ஷை எடுத்துதான் சாப்பிடவேண்டும் என்பது ஐதீகம். ஆனால் அது இப்பொழுது காலகட்டங்களில் மாறிவிட்டது. முன் காலத்தில் வேதபாராயணம் செய்யும் குழந்தைகள் பிட்க்ஷை எடுத்து அதை நதிகரையிலோ குருவின் வீட்டிலோ சாப்பிடுவார்கள்.) அப்போது எனக்கு கல்யாணம் ஆகவில்லை பிரம்மச்சாரி. பிட்க்ஷை எடுத்து சாப்பாட்டை ஸ்ரீ சுவாமிகளுக்கு கொடுத்துவிட்டு நீ எந்தவீட்டில் பிட்க்ஷை எடுத்தாயோ அந்த வீட்டில் சாப்பிட்டுவிட்டு திரும்பவும்

ஸ்ரீ சுவாமிகளிடம் வந்துவிடணும்'' என்றார். நானும் ஸ்ரீ மகாபெரியவா சொன்னபடியே செய்து வந்தேன். ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகளும் சித்தி அடைந்து விட்டார். நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் திரும்பவும் செல்ல கிளம்பினேன். ஊர் மக்கள் என்னை போக வேண்டாம் நாங்கள் உங்களை நன்றாக பார்த்து கொள்கிறோம் என்றார்கள். நான் இதை ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா வேண்டாம் ''என்னிடம் வந்துவிடு'' என்று சொன்னார். நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் சென்றுவிட்டேன். இந்த சமயத்தில்தான் நான் ஸ்ரீ நடேச சாஸ்திரிகளிடம் 'ருத்ரசமகம்' கற்றுக்கொண்டேன். ஸ்ரீ கட்டளை கிருஷ்ணாநந்த சாமிகளிடம் விஷ்ணு சகஸ்ரநாமம் கற்றுக்கொண்டேன். நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் ஸ்ரீ கிருஷ்ணநந்த சுவாமிகள் உங்களை 'நாராயணன்' என்று சொல்கிறாரே?என்று கேட்டேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா ஒரு பொருளை அடுப்பில் போட்டால் முதலில் கருப்பாகி திரும்பவும் அடுப்பில் நன்றாக எரிந்தபின் வெள்ளையாகி சாம்பலாகிவிடுகிறது. இதுதான் தத்துவம். ''ஹரியும் சிவனும் ஒன்று'' என்றார். அதாவது

பொருள் – தெய்வம்
அடுப்பு – மனது
கருப்பு – விஷ்ணுவின் நிறம்
வெள்ளை – சிவன்.

ஒரு நாள் நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் என்னை ஏன் ஸ்ரீ கிருஷ்ணந்த சுவாமிகளுக்கு கைங்கர்யம் செய்ய அனுப்பினீர்கள்? என்று கேட்க ஸ்ரீ மகாபெரியவா **"என் வயதான காலத்தில் நீ எப்படி என்னை பார்த்துக் கொள்ளணும் என்று தெரிந்து கொள்ள தாண்டா உன்னை அனுப்பினேன்''** என்று சொன்னார். அதன்படியே எனக்கும் அந்த பெரும்பாக்கியம் கிடைத்ததில் பெரும் ஆனந்தம் கொள்கிறேன்.

நான் கட்டளை கிருஷ்ணாநந்த தீர்த்த சுவாமிகளிடம் இருக்கும் போது என் தகப்பனார் கொல்லைப்புறம் போக வேண்டும் என்று என் தம்பியை கூப்பிட அவன் வரவில்லை. என் தகப்பனாருக்கு கண் தெரியாது. வேதபுரி என்று என்னையும் அழைத்து இருக்கிறார்.

ஸ்ரீ மகாபெரியவா நான்தான் வேதபுரி என்று சொல்லி என் தகப்பனாரை கொல்லைப்புறம் கூட்டிசென்று வந்து பிறகு அவரை நல்லபடியாக பார்த்துக் கொண்டிருக்கிறார். இதை நான் செய்த பாக்கியம் என்பதா? என் தகப்பனார் செய்த பாக்கியம் என்பதா? அந்த கருணைக் கடலின் கருணை என்பதா? தெரியவில்லை. வி.டி.ராஜன் என்பவர் பிரஸ் வைத்திருந்தார் அவரிடம் என் தம்பிக்கு எழுத்து கோக்கவும், அச்சு, அடிக்கவும் சொல்லிக் கொடுத்து வேலைக்கு வைத்துக் கொள்ளவும் சொன்னார். ஸ்ரீ மகாபெரியவா.

என் தகப்பனாருக்கு கும்பகோணம் பச்சையப்பமுதலி தெருவில் இருக்கும் டாக்டர்.மகாலிங்கம் அவர்களிடம் கண் ஆப்ரேஷன் செய்ய சொன்னார்.

*****

ஒருவர் வீட்டில் சாப்பிட்டு எழுந்திருக்கும்போது "அன்னதாதா சுகிபவ; அட்க்ஷையம் உபதிஷ்டது" என்று சொல்லு என்றும் சொல்லிகொடுத்தார்.

அர்த்தம் : அன்னம் போட்டவா நன்றாக இருக்கணும்
அன்னம் நன்றாக வளரணும்.

*****

என் கல்யாணம் ஆனபிறகு நான் என் மனைவியுடன் சென்னையில் சைதாப்பேட்டையில் ஒரு வீடு எடுத்து வசித்து வந்தேன். வீட்டிற்காக நிறைய கடன்பட்டுவிட்டேன். ஸ்ரீ மகாபெரியவாளுக்கே நிறைய கவலைகள் இருக்க, நான் என் கவலையை சொல்லவில்லை. அப்போது ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயில் குளத்தில் ஸ்நானம் செய்துவிட்டு குளக்கரையில் தரிசனம் கொடுத்துக்கொண்டிருந்தார். என்னிடம் "ஏண்டா நீ சென்னையில் உன் மனைவியோட இருக்க ரொம்ப கடன்பட்டுவிட்டாயா"? என்று கேட்டார். நான் அதெல்லாம் ஒன்றுமில்லை என்றேன். அப்போது யாரோ ஸ்ரீ மகாபெரியவாளுக்கு தட்டு நிறைய பணம்

கொடுத்திருந்தார்கள். அதை ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் கொடுத்து 'எல்லா கடனையும்அடைத்துவிட்டு என்னிடம் வந்துவிடு' என்றார். நான் என் மனைவியிடம் கொடுத்து ஸ்ரீ மகாபெரியவாளை பற்றி கோபித்துக் கொண்டாயே? இப்பவும் ஸ்ரீ மகாபெரியவா என்னை ஒரு தந்தை மகனை காப்பாற்றுவது போல் காப்பாற்றுகிறார் என்றேன். ( ஸ்ரீ மகாபெரியவாளுக்கு பக்தர்கள் கொடுத்த பணத்தை எப்படி எனக்கு கொடுக்கலாம் என்று யாரும் நினைக்கக்கூடாது. ஸ்ரீ மகாபெரியவா சொன்னது இந்த பணம் எனக்கோ, உனக்கோ சொந்தம் இல்லை. சில பக்தர்கள் ஸ்ரீ மடத்திற்கு கைங்கர்யம் செய்கிறவர்களுக்கு கொடுக்கவும் சொல்கிறார்கள். அதனால் இதை உனக்கு நான் தருகிறேன். யாராவது என்னை கேட்டால் நான் பார்த்துக் கொள்கிறேன் என்றார்.) பிறகு நானும் என் தாய், தந்தை, குரு, தெய்வத்திடம் சென்றுவிட்டேன். என் மனைவியும் என் தகப்பனாருடன் கிராமத்திற்கே சென்றுவிட்டாள். ஸ்ரீ மகாபெரியவா எப்போது என்னை கிராமத்திற்கு போக உத்தரவு தருகிறாரோ அப்போது நான் கிராமத்திற்கு செல்வேன். எங்கள் அறுபதாம் கல்யாணத்திற்கு நாங்கள் ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்காரம் செய்யும் போது ஸ்ரீ மகாபெரியவா என்னை "ப்ரம்மஸ்ரீ வேதபுரி" என்று அழைத்தார்.

*****

ஒரு நாள் நான் ஸ்ரீ மகாபெரியவாளிடம் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது ஸ்ரீ மகாபெரியவாளிடம் நீங்கள் மகானாக இருக்கும்போது ஏன் நிறைய பக்தர்கள் வருவதில்லை என்று கேட்டேன். எல்லோருமே என்னிடம் வந்துவிட்டால் என்னால் என்ன செய்ய முடியும். ஏரியில் தண்ணீர் சேர்ந்து விடுகிறது. பிறகு அது எங்கோ எப்படி கடலிடம் செல்கிறது. நதியாக, ஓடையாக, வாய்காலாக சென்று செல்லும் வழியில் பயிர்களுக்கு நீர்கொடுத்து பிறகு கடலில் ஒன்றாக கலக்கிறது. அதே போல் பக்தர்கள் அவர்களுக்கு பிடித்த மகானிடம் செல்கிறார்கள். பிறகு அவர்களின் கவலைகள் நிவர்த்தியாகி கடல் என்னும் பகவானிடம் செல்கிறது. நானும் நீயும் வாழ்வது எல்லாமே

அந்த பகவானால்தான் என்றார்.

## ஸ்ரீ மகாபெரியவா சில சமயம் கதையும் சொல்வார் அதில் ஒன்று

ஒரு ராஜா இருந்தான் அவனுக்கு நான்கு பெண்கள். அவன் முதல் பெண்ணிடம் தீபாவளி அன்று உனக்கு புடவை, பட்டாசு எல்லாம் யார் வாங்கி கொடுத்தா? என்று கேட்க அந்த பெண் அப்பா நீங்கள் தான் என்றாள். இதே மாதிரி இரண்டாவது, மூன்றாவது பெண்ணிடமும் கேட்க அவர்களும் அப்பா நீங்கள்தான் என்றார்கள். நான்காம் பெண்ணிடம் கேட்க லக்ஷ்மிகடாக்ஷம் என்றாள். ராஜாவிற்கு கோபம் வந்து அவளை காட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டான். நான்கு பெண்களும் திருமணம் ஆனவர்கள். ஒரு நாள் ராஜா குளத்தில் குளிக்க சென்றபோது தன் முத்துமாலையை கழற்றி வைத்தான். அதை ஒரு கழுகு கொண்டு சென்று விட்டது. காட்டில் வசிக்கும் பெண் வேட்டையாடி அதில்வரும் வருமானத்தில் வாழ்பவள். அன்று கணவருக்கு ஒரு செத்தபாம்பு கிடைக்க அதை அந்த பெண் வீட்டின் கூரைமீது போட்டாள். கழுகு முத்துமாலையை கூரைமீது போட்டது. ஏதோ சத்தம் கேட்க அந்த பெண் வந்து பார்த்தாள். முத்துமலை கிடைத்தது. இது என் அப்பாவினுடையது என்ற சந்தோஷத்தில் வைத்துக் கொண்டாள். ராஜாவிற்கும் பணம் குறைய ஆரம்பித்தது. ராஜா யார் அந்த முத்துமாலையை கொண்டுவந்து கொடுத்தாலும் அவர்கள் கேட்பதைத் தருகிறேன் என்றார். அந்த பெண் பணம், காசு கேட்கவில்லை தீபாவளி அன்று காட்டில் மட்டும் தீபம், வானவேடிக்கை விடவேண்டும் நகரத்தில் கூடாது என்றாள். ராஜாவும் சம்மதித்தான். தீபாவளி காட்டில் விமரிசையாக நடந்தது. இலட்சுமி தேவியும் தரிசனம் கொடுத்தாள். ராஜாவோ ஏழையாகி விட்டான். முதல் மூன்று பெண்களிடமும் தன்னை காப்பாற்றுமாறு கேட்க அவர்கள் மறுத்துவிட்டார்கள். நான்காவது பெண்ணிடம் சென்றார். அவளோ மிகவும் சந்தோஷப்பட்டு தன் தகப்பனாரை தன்னுடன் வைத்துக் கொண்டாள். ராஜாவிற்கும் புத்தி வந்தது. இதில் நமக்கு தெரிவது கடவுள் அருளில் தான் நமக்கு எல்லாமே

*****

அகரி என்ற ஊரில் சிமெண்ட் ஆலையில் நூறு பேர் வேலை செய்துவந்தார்கள். சாதுர்மாஸிய பூஜை சமயம் ஸ்ரீ மகாபெரியவா அந்த ஊருக்கு வந்தார்கள். அந்த ஊர் பெரியோர்களிடம் நான் சாதுர்மாஸ்ய பூஜை வரை இங்கு தங்கலாமா? என்று கேட்டார். அதற்கு அந்த ஊர் மக்கள் இங்கு மழையே இல்லை. தண்ணீர் காசு கொடுத்து வாங்குகிறோம். நீங்கள் கஷ்டபடுவீர்களே என்று சொன்னார்கள். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா நீங்கள் எல்லோரும் கஷ்டப்படும் போது நான் மட்டும் கஷ்டப்படக்கூடாதா? என்று கேட்டார். பிறகு நான் சொல்வதை உங்களால் செய்ய முடியுமா? என்று கேட்டார். அவர்கள் ஆமோதித்தனர். 108 குடம் தண்ணீர் இந்த பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்யுங்கள். காலைக்குள் மழைவரவில்லை என்றால் நான் இந்த ஊரைவிட்டே போகிறேன் என்றார். பிள்ளையாருக்கும் அபிஷேகம் செய்யப்பட்டது. மழையும் பலமாக பெய்து ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. ஸ்ரீ மகாபெரியவாளும் சாதுர்மாஸிய பூஜையை முடித்துவிட்டு சென்றார். இது நானும் கூட இருந்து அனுபவித்தது.

*****

ஊர் பெயர் தெரியவில்லை. ஊரே வரண்டு நிலங்கள் வெடித்து இருந்தது. அந்த ஊரில் ஸ்ரீ மகாபெரியவா திக்விஜயம் செய்தார். அந்த ஊர் மக்களிடம் ஒரு தொட்டியில் இருப்புவரை தண்ணீர் நிரப்ப சொன்னார் அதில் ஸ்ரீ மகாபெரியவா தவம் இருந்து வர்ணஜெபம் செய்தார். நல்ல மழை பெய்து ஊர் செழித்தது. இதுவும் நான் அனுபவித்த ஒன்று.

*****

ஸ்ரீ மகாபெரியவா வசந்த நவராத்திரி அழகாக கொண்டாடுவார். வசந்த நவராத்திரி பத்து நாட்கள் நடைபெறும். தினமும் ஸ்ரீ ராமர், ஸ்ரீ சீதா, ஸ்ரீ லஷ்மணன், ஸ்ரீ ஆஞ்சநேயர் விக்ரகங்களை வைத்து ஸ்ரீ மகாபெரியவா அபிஷேகம், ஆராதனை செய்வார். பின் பகவான்

தேரில் வைத்து புஷ்பத்தால் அலங்காரம் செய்வார். இரவில் ஊஞ்சல் அலங்காரம் செய்து ஊஞ்சல் ஆட்டி பாட்டுப்பாடி ரொம்ப அழகாக பூஜை செய்வார். இது பத்து நாட்களும் நடைபெறும். பட்டாபிஷேகம் அன்று ஸ்ரீ ராமர், சீதா, லக்ஷ்மணன், ஸ்ரீ ஆஞ்சநேயர் விக்ரகங்களை சற்று உயரமாக வைத்து அந்த அபிஷேக தீர்த்தம் ஒரு அண்டாவில் விழுமாறு அமைத்து ஸ்ரீ மகாபெரியவா அந்த அண்டாவில் உட்கார்ந்து கொள்ள பகவானின் அபிஷேகதீர்த்தம் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு அபிஷேகமாக விழும். இந்த தீர்த்தம் பக்தர்களுக்கு தெளிக்கப்பட்டு எல்லோருக்கும் வழங்கப்படும்.

## ஸ்ரீ மகாபெரியவாளின் சில உபதேசம்

### ஆயுஷ்யஹோமம்

ஆயுஷ்யஹோமம் என்பது குழந்தையின் முதல்வயது பூர்த்தி ஆகும் போது செய்யப்படுவது. இது குழந்தை தீர்க்க ஆயுசாக இருப்பதற்காக செய்யப்படுவது.

### அமாவாசை

அமாவாசை தர்ப்பணம் கட்டாயம் செய்யவேண்டும். இது காலமான மாதா, பிதாவிற்கு தீர்த்தம் கொடுப்பதாக அர்த்தம்.

### திவசம்

திவசம் என்பது பித்ருக்களை சாந்தப்படுத்துவதற்கு செய்யப்படுவது. இதை ஒரு வீட்டில் எத்தனை பிள்ளைகள் இருந்தாலும், பிள்ளைகள் தனிக்குடித்தனம் என்று செய்தால் தனித்தனியாக செய்யவேண்டும். இது எங்களை போன்ற சாமியார்களுக்கும் உண்டு. எங்களுக்கு நான்கு தலைமுறை சொல்லி செய்ய வேண்டும் என்றார். (சங்கரமடத்தில் ஸ்ரீ மகாபெரியவா தன் குருவிற்கு செய்தார். இப்போது ஸ்ரீ மகாபெரியவாளுக்கு ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா செய்து வருகிறார்).

### ஐந்து பதிவிரதைகள்

அகல்யா, த்ரௌபதி, சீதா, தாரா, மண்டோதரி, அகல்யா ராமரால் சாபவிமோசனம் பெற்றவர். அகல்யாவை பதிவிரதையா என்று சோதிப்பதற்கு இரும்பால் கடலை செய்து வேகவைத்து கொடு என்று சொல்ல அகல்யா பதியை தியானித்து வேகவைக்க இரும்புகடலையும் வெந்ததாம். பதிவிரதை என்றால் பதி இல்லாமல் (கணவன்) வீட்டின் வாசலைகூட தாண்டமாட்டாள் என்பது அர்த்தம்.

### பாவம், புண்ணியம்.

பாவம், புண்ணியம் என்ற இரண்டும் மனித வாழ்க்கையில் ஒன்றியுள்ள ஒன்றாகும். எப்பவும் ஒருவன் நான் என்ன பாவம் செய்தேன். இப்படி கஷ்டப்படுகிறேன் என்று செல்வான். பாவம் செய்யாதவனே கிடையாது என்றார். நான் "உங்களிடம் தான் இருக்கேன் நான் எப்படி பாவம் செய்தேன்?" என்றேன். "நீ ராத்திரி தூங்கும் போது கொசு கடிச்சுதுனு கொசுவ அடிச்சியே, கொசு செத்துப்போச்சு அதுவும் பாவம் தானே" என்றார். நாம் நம்மால் முடிந்த புண்ணியங்கள், நல்ல செயல்கள் செய்ய அது நம் தலைமுறைகளை காப்பாற்றும் என்றார்.

### யார் முகத்தில் முழித்தாய்

ஒரு முறை நான் மடத்தில் கால்தடுக்கி விழுந்துவிட்டேன். நல்ல அடி, ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் யார் முகத்தில் முழித்தாய்? என்று கேட்டார். எனக்கு பதில் சொல்ல தெரியவில்லை. ஸ்ரீ மகாபெரியவா சொன்னா "எப்பவும் காலையில் எழுந்திருக்கும் போது நாம் நம் உள்ளங்கையை பார்த்துவிட்டு கண்ணில் ஒற்றிக் கொள்ளணும், கோயில், மலை, கணவன் மனைவியின் முகத்தில் முழிக்க வேண்டும் என்றார்.

ஸ்ரீ மகாபெரியவா மாலையில் உபன்யாசம் செய்வார். உபன்யாசம் செய்ய ஆரம்பிக்கும் முன் "ஸ்ரீ குருபிரம்மா குருவிஷ்ணு...

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே நமஹ: என்று சொல்வார். "நான் 13 வயதிலேயே மடத்திற்கு வந்து விட்டேன் எனக்கும் ஒன்றும் தெரியாது. ஸ்ரீ காமாட்சியும், ஸ்ரீ ஆதிசங்கரரும் என்னை பேசவைப்பார்கள்" என்று பிரார்த்தித்து உபன்யாசம் செய்ய ஆரம்பிப்பார்கள். சரளமாக பேசுவார் கேட்பவர்கள் ஆச்சர்யமும், ஆனந்தமும் அடைவார்கள். சிலர் ஸ்ரீ மகாபெரியவா பேசுவதை டேப்பிலும், எழுதியும் வைத்து, மறு நாள் புத்தகங்களிலும், பேப்பரிலும் வெளியிடுவார்கள். ஸ்ரீமகாபெரியவா உபன்யாசம் கேட்க திரு.ராஜாஜி, திரு.அனந்தராமதீட்க்ஷிதர், பெரிய மனிதர்களும், பக்தர்களும் வருவார்கள். இடம் இல்லாமல் மரம்மீதும், சுவர்மீதும் உட்கார்ந்து கேட்பார்கள் பக்தர்கள். 1932ல் மைலாப்பூர் சமஸ்கிருத கல்லூரியில் நடந்தது.

*****

காஞ்சிபுரம் ஸ்ரீ சாந்தாலேஸ்வரர் கோயில் பூந்தோட்டத்தில் ஒரு முறை திருV.V.கிரி அவர்கள் மனைவியுடன் ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்துவிட்டு பசுமாட்டை கன்றுக்குட்டியுடன் கொடுத்தார்கள். ஸ்ரீ மகாபெரியவா "எனக்கு எதற்கு" என்றார்? திரு.V.V.கிரி இது எங்களுடைய ஆசை என்றார். ஸ்ரீ மகாபெரியவா "இது அரசாங்கத்தின் பணமா" இல்லை உன் பணமா? என்று கேட்டார். திரு.V.V.கிரி அவர்கள் இரண்டும் இல்லை. நான் என் மனைவிக்கு கொடுக்கும் பணத்தில் கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்து வைத்தாள். உங்களுக்காக பசுமாடு, கன்றுகுட்டி தரணும் என்ற ஆசையில், அந்த பணத்தில் வாங்கியது என்றார். "சரி அப்படியென்றால் கோசாலையில் சேர்த்துவிடு" என்றார் ஸ்ரீ மகாபெரியவா "புடம்போட்ட தங்கம்" என்று சொல்ல இந்த அனுபவம் போதுமே.

*****







திரு எம்.ஜி.ஆர் அவர்கள் மனைவி ஜானகியம்மாளுடன் ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்ய வந்தார். (திரு.எம்.ஜி.ஆர் உடம்பு சரியில்லாமல் பின் சரியான பிறகு) பெரிய பொட்டலம் ஒன்றும், பூ, பழம், எல்லாம் வைத்து ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்கரித்து கொடுத்தார்கள். ஸ்ரீ பெரியவா ஆசீர்வதித்து அனுப்பினார். மேனேஜரை கூப்பிட்டு ''வழியனுப்பி விட்டு வா'' என்று சொன்னார். திருமதி.ஜானகியம்மாள் மேனேஜரிடம் பொட்டலத்தில் பணம் இருக்கு ஸ்ரீ மகாபெரியவாளிடம் கொடு என்றார். மானேஜர் வந்து தட்டில் பார்த்தபோது பொட்டலம் இல்லை. மேனேஜர் சிப்பந்திகளிடம் கேட்க அவர்கள் பண் பொட்டலம் என்று உள்ளே வைத்துவிட்டதாகவும், சொன்னார். மேனேஜர் எதுவும் சொல்லாமல் பொட்டலத்தை கொண்டு வரச்சொன்னார். சிப்பந்திகள் பொட்டலத்தை மேனேஜரிடம் கொடுத்தார்கள். ஸ்ரீ மகாபெரியவா முன் பொட்டலம் பிரித்து பார்க்கப்பட்டது. அதில் பணம் இருப்பது தெரிய, ஸ்ரீ மகாபெரியவா இந்த பணத்தில் பெரிய குளம் வெட்டவும் அதில் இருக்கும் தண்ணீரை ஊர் மக்களும், வாயில்லா ஜீவன்களும், பட்சிகளும் உபயோகிப்பார்கள் என்று சொல்லிவிட்டார்.

திரு.எம்.ஜி.ஆர் அவர்கள் ஆட்சிக்கு தேர்வு செய்யப்பட்ட சமயம். கலவையில் ஸ்ரீ மகாபெரியவா இருந்தார். ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்து ஆசீர்வாதம் வாங்க திரு.எம்.ஜி.ஆர் அவர்கள், திரு. மணியன் அவர்களுடன் வந்தார். திரு.எம்.ஜி.ஆர் அவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் நான் பதவி ஏற்றுக்கொள்ள இருக்கிறேன் எனக்கு உங்கள் ஆசீர்வாதம் வேண்டும் என்று கேட்டார். ஸ்ரீ மகாபெரியவா ''நான் படிக்காதவன். என்னிடம் ஒன்றுமில்லை'' என்றார். அதற்கு திரு.எம்.ஜி.ஆர் அவர்கள் நீங்கள் ஜெகத்குரு அதனால் வந்தேன் என்றார். ''சரி நல்லபடியாக ஆட்சிசெய்து மக்களுக்கு நல்லது செய்'' என்று கூறி ஆசி வழங்கினார்.

*****

ஜரிணியில் பசுமாடுகள் கொல்லப்பட்டு வந்த சமயம். ஸ்ரீ மகாபெரியவா ஜரிணி ராணியை வரவழைத்து "உன்னால் இந்த பசுமாடுகள் கொல்லப்படுவதை தடுக்க முடியும் முயற்சி செய்" என்று புத்திகூறி அனுப்பினார்.

திரு.மகாத்மாகாந்தி ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்தபிறகு ஸ்ரீ மகாபெரியவாளும் கதரில் வஸ்திரம் கட்ட ஆரம்பித்தார். இது போல் திரு.காமராஜ், திருமதி.இந்திராகாந்தி, திரு.ராஜீவ்காந்தி, திருமதி.சோனியா காந்தி இன்னும் பல பெரிய மனிதர்களும் திருமதி.எலிசபத் டெய்லர் போன்றவர்களும் ஸ்ரீ மகாபெரியவாளின் தரிசனத்திற்கு வந்துள்ளார்கள். ஸ்ரீ மடத்தின் பின்பக்கம் உள்ள பசுமாடு இருக்கும் திறந்த வெளியில் ஒரு கொட்டகையில் தரிசனம் செய்வார்கள். காஞ்சிபுரத்தில் ஸ்ரீ காமாட்சி கோயில் அருகில் உள்ள குல்லாசத்திரத்திலும் ஸ்ரீ மகாபெரியவா தங்குவார்கள்.

காஞ்சிபுரத்தில் ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயிலுக்கு நான்கு கோபுரம் உண்டு. இதில் ஒரு கோபுரம் குல்லாசத்திரம் ரோட்டில் உள்ளது. ஒரு முறை ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ காமாட்சியை தரிசனம் செய்துவிட்டு குல்லாசத்திரத்தின் கோபுரவாயில் வழியாக வரும்போது எங்களுக்கு ஒற்றைக்காலில் தவம் இருந்து ஸ்ரீ காமாட்சியின் ஒற்றைக்கால் தவத்தை காட்சியளித்தார்"

ஸ்ரீ காமாட்சியும், ஸ்ரீ மகாபெரியவாளும் ஒன்றுதான் என்பதை உணர்த்தினார்.

ஸ்ரீ மகாபெரியவா "ஸ்ரீ காமாட்சி என்னை ரட்சி" என்று சொல்லிக்கொண்டே இருப்பார்.

ஸ்ரீ மகாபெரியவா பூஜையை ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளிடம் ஒப்படைத்தபிறகு ஆத்மபூஜை செய்வார். இந்த காட்சி கிடைப்பது அபூர்வம். ஆனந்தம்.

நான் சிறு வயதிலேயே ஸ்ரீ மகாபெரியவாளிடம் வந்துவிட்டதால் எனக்கு பள்ளிக்கூட படிப்போ, வேதமோ தெரியாது. ஆனால் ஸ்ரீ மகாபெரியவா எனக்கு வேதம், சாஸ்திரம், மந்திரங்களை

சொல்லிக்கொடுக்கச் சொன்னார். எனக்கு வேதம் சொல்லிக் கொடுத்தவர் மேச்சேரி பட்டு சாஸ்திரிகள் (மகாதேவ சாஸ்திரிகள்) அப்பாவின் பெயர் ஸ்ரீ ராமநாத சாஸ்திரிகள். நான் மேச்சேரி பட்டு சாஸ்திரிகளிடம் மகா சங்கல்பம் கற்றுக் கொண்டேன். (ஸ்ரீ மகாபெரியவா கேட்டுக் கொண்டதின் பேரில்) அமாவாசை தர்ப்பணம் மந்திரம், பூணல், மந்திரம், புண்ணியாகவசன மந்திரம் எல்லாம் சொல்லிக் கொடுத்தார்கள். (இன்றும் இவர் மேற்கு மாம்பலத்தில் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு அனுஷ நக்ஷத்திரம் அன்று ஹோமம் செய்து பூஜை செய்கிறார். பிரதோஷமும் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு விமரிசையாக நடத்துகிறார். அனுஷம் நட்சத்திரம் அன்று மாலை ஸ்ரீ மகாபெரியவாளுக்கு அலங்காரம் செய்து உற்சவமும் செய்கிறார்) இரவு எல்லோரும் தூங்கிய பிறகு என்னை எழுப்பி "இன்று என்ன கற்றுக்கொண்டாய்?" என்னிடம் சொல் என்று கேட்டு சரியாக சொல்லித்தருவார். இது தன் தாய் குழந்தைக்கு எப்படி பாடம் சொல்லிகொடுப்பாளோ அப்படிப்பட்ட அனுபவம் எனக்கு கிடைத்தது.

இந்த வேதங்களையும் மந்திரங்களையும் நான் நல்லபடியாக உபயோகிக்க வேண்டும் என்பதற்காக என்னை ஒவ்வொரு அமாவாசைக்கும் சென்னை அனுப்புவார். பஸ் செலவு போக வர ரூபாய் மூன்று ஆகும். ஆனால் வருமானமோ 25பைசா இல்லை 50பைசா தான். எனக்கு இது கொஞ்சம் கவலையாக இருக்க, இதை ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொன்னேன். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா உனக்கு வரும்படிக்காக அனுப்பவில்லை. என் காலத்திற்கு பிறகு உனக்கு வருமானம் வேண்டாமா? அதற்காகத்தான் இந்த ஏற்பாடு என்றார். இது ஒரு தந்தை தன் குழந்தையின் எதிர்காலம் நன்றாக இருக்க எப்படியெல்லாம் முயற்சிப்பாரோ அதுபோல் ஆகும். சென்னையில் இருக்கும் டாக்டர். ரகுராமிடம் என் பஸ் செலவிற்கு ஏற்பாடு செய்து கொடுத்தார். இன்னும் நான் எப்பொழுது சென்னையில் டாக்டர்.ரகுராம் வீட்டிற்கு சென்றாலும் அவர்களும் எனக்கு உதவி செய்கிறார்கள். என் ஸ்ரீ மகாபெரியவா எனக்கு தந்தையாகி நின்றார். ஸ்ரீ மகாபெரியவாளை நம்பினோர் கைவிடப்படார்.

*****

எனக்கு ஸ்ரீ மகாபெரியவா சமையல் செய்ய சொல்லிக் கொடுத்தார். 11 அல்லது 12 வயது இருக்கும். முதலில் சாதம் வடிக்க சொல்லிக் கொடுத்தார். ஸ்ரீ மடத்தில் இருக்கும்போது இரும்பு அடுப்பில் சமையல். வெளியில் திக்விஜயம் செய்யும் போது 3 கல்களை ஃ வடிவத்தில் வைத்து நடுவில் காய்ந்த –குச்சி, கட்டைகளை வைத்து தீ வைத்து பானையை அடுப்பில் வைத்து தண்ணீர் ஊற்றி கைவிரல் நுனிபடும்வரை தண்ணீர் ஊற்ற வேண்டும். தண்ணீர் கொதிவரும் சத்தம் வந்ததும் அரிசியை களைந்துபோட்டு கரண்டியால் கிளறிவிட்டு மூடிவிட்டு நெருப்பை கொஞ்சம் குறைத்துவிட்டு வா கொஞ்சநேரம் கழித்து ஒரு சாதம் எடுத்து நசுக்கிப்பார் நசுங்கி விட்டால் வெந்துவிட்டது என்று அர்த்தம் என்று சொல்லிக் கொடுத்தார்.

*****

பெருங்காய பொடி தீர்ந்துவிட்டது என்று சொன்னேன் டப்பாவை அலம்பி பருப்பு ஜலத்தில் ஊற்று அது சாம்பார், ரசத்திலும் வாசனைதரும் என்பார்.

*****

நாங்கள் ஸ்ரீ பெரியவாளுடன் வெளியூர் செல்லும்போது சில இடங்களில் யாகம் செய்ய நெருப்பு பற்றவைக்க கஷ்டமாக இருக்கும். அப்போது ஸ்ரீ மகாபெரியவா அரளி கட்டைகளை போட்டு பெரிய மத்துபோல் இருக்கும் கட்டையால் கடையச் சொல்வார். நெருப்பு 'குப்' என்று பற்றிக்கொள்ளும்.

சாம்பார் வைக்க முதலில் பருப்பை வேகவை காய்களை சின்னதாக வெட்டி தண்ணீரில் போட்டு காரப்பொடி உப்புப்பொடி போட்டு கொதிக்கவிடு. காய்கள் வெந்தவுடன் வேகவைத்த பருப்பிலிருந்து தெளிவை ரசத்துக்கு வைத்துக்கொண்டு பருப்பை போடு என்பார். இன்னும் வாசனையாக இருக்க தேங்காய், கொத்தமல்லி விதை, கடலைபருப்பு அரைத்துவிடு என்பார். சாம்பாருக்கு கடுகு, வெந்தயம்

தாளித்துகொட்டு என்பார். நான் உம்மாச்சிக்கு இதெல்லாம் எப்படி தெரியும்? என்று கேட்டேன். "நான் சின்ன வயதில் என் அம்மா சமைக்கும்போது பக்கத்திலிருந்து கவனித்து தெரிந்து கொண்டது" என்றார்.

*****

நான் (வேதபுரி) ஸ்ரீ மகாபெரியவாளுடன் இருந்தேன் வீட்டைபற்றி கவலையே படவில்லை. ஒரு நாள் என் மனைவி என்னிடம் வந்து குழந்தை ரொம்ப படுத்துகிறான். வீட்டிற்கு வாங்கோ என்றாள். நான் "போடி மகாபெரியவா பார்த்துப்பா" என்று சொல்லி அனுப்பிவிட்டேன். மனைவி தபால் போட்டு இருக்கிறாள். அது ஸ்ரீ மகாபெரியவா கையில் கிடைத்துவிட்டது. என்னை கூப்பிட்டு ஆத்துக்குபோய் குழந்தைகளுடன் இருந்துவிட்டு வா என்று அனுப்பிவைத்தார் அந்த கருணாமூர்த்தி.

*****

விஜயவாடாவில் சாதுர்மாஸ்ய பூஜை. ஸ்ரீ மகாபெரியவாளுடன் ஸ்ரீ ஜெயேந்திரபெரியவாளும் இருந்தார்கள். அப்போது எட்டு சன்யாசிகள் வந்து தாங்களும் பூஜையில் கலந்துகொள்ளப் போவதாக கூறினார்கள். ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா என்னிடம் இந்த எட்டு சன்னியாசிகளையும் ஸ்ரீசைலம் மடத்தில் தங்கவைத்து நல்லபடியாக கவனித்துக்கொள்ளச் சொன்னார். நான் இதை ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொன்னேன் எந்தவேலையும் ஸ்ரீ மகாபெரியவாளுக்கு தெரியாமலோ, தெரிவிக்காமலோ செய்யமாட்டேன். ஸ்ரீ மகாபெரியவா "டேய் நீ கல்யாணம் ஆனவன். உனக்கு குடும்பம் இருக்கு இரண்டு மாதம் இங்கேயேயென்றால் உன் மனைவி குழந்தைகளை கவனிக்க வேண்டாமா? இரண்டு மாதச் சம்பளம் வாங்கி ஊருக்கு உன் மனைவிக்கு அனுப்பு. கடிதத்தில் இரண்டு மாதம் ஸ்ரீ சைலத்தில் இருக்கப்போவதாகவும் எழுது என்றார். நானும் அப்படியே செய்தேன். இரண்டு மாத சாதுர்மாஸ்ய பூஜை முடிந்தபிறகு ஸ்ரீ மகாபெரியவா என்னை ஒரு மாதம் ஊருக்கு போயிட்டு வா என்றார். எதற்கு?

என்றேன். உன் மனைவி நீ அனுப்பிய சம்பளத்தில் குடித்தனம் செய்தாளா? இல்லை கடன் வாங்கியிருந்தால் அதை அடைத்துவிட்டுவா என்றார்.''

*****

ஸ்ரீ மகாபெரியவா தன்னை தரிசனம் செய்யவருபவர்கள் மனசு கவலைப்படக்கூடாது என்று நினைப்பவர். ஊர் பெயர் தெரியவில்லை. ஸ்ரீ மகாபெரியவா சில நாட்கள் பண்டரிபுரத்தில் இருந்தார். ஊரே வெள்ளம். யாராலும் ஸ்ரீ மகாபெரியவாளை தரிசனம் செய்ய வரமுடியாது. ஸ்ரீ மகாபெரியவா அக்கரையில் இருப்பவர்களுக்கு நிலைமையை எடுத்துச் சொல்லி வெள்ளம் வடிந்தபின் வருமாறு சொல்லிவிட்டார். மற்றொரு முறை காலை ஒரு குறிப்பிட்ட மணி நேரம் வரை தரிசனம் கிடைக்கும். அதற்குபின் தான் ஜபத்தில் இருக்கபோவதாகவும் தரிசனத்திற்காக வருபவர்கள் வருத்தப்படவேண்டாம் என்று சொல்லிவிடுவார். ஹரியும் சிவனும் ஒன்று என்பதை உணர்த்த ஏகாதசி அன்று மாலை விளக்கு ஏற்றிவிட்டு 'ராமா ராமா' என்று 108 முறையும் 'சிவா சிவா' என்று 108 முறை கட்டாயம் எல்லோரும் சொல்லவேண்டும் என்பார்.

காஞ்சிபுரத்திலிருந்து தாமல் போகும் வழியில் பாலுசெட்டி சத்திரம் ரோடிலிருந்து ஒரு பர்லாங்கில் திருப்புட்குழி உள்ளது. ஜடாயுவிற்கு மோட்சம் கொடுத்த இடம். ஸ்ரீ மகாபெரியவா வசந்த நவராத்திரி செய்வார். ஒரு குளத்தில் குளித்துக்கொண்டிருக்கும் போது என்னிடம் "உனக்கும் மோட்சம் கொடுக்கட்டுமா?"னு கேட்டா ஸ்ரீ மகாபெரியவா எப்படி சொல்றேளோ நடக்கட்டும்" என்றேன்.

*****

ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் பூஜா ரூமில் 16 கருங்கல் தூண்கள் உள்ளது. ஒரு தூணுக்கான செலவு அந்தகாலத்தில் 300 ரூபாய்

ஆனது. ஸ்ரீ மகாபெரியவா கேட்டுக்கொண்டதின் பேரில் கட்டிக் கொடுக்கப்பட்டது.

*****

திரு.பிர்லா அவர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் தான் பணம் தருவதாகவும், இந்த மடத்தை கட்டிவிடலாம் என்றார். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா "நான் மடத்திற்கு வரும்போது கொட்டகையாக இருந்த இடம்" எனக்கு கொட்டகைதான் பிடிக்கும் அதனால் வேண்டாம் என்று சொல்லிவிட்டார். அதேபோல் ஸ்ரீ மகாபெரியவா எங்கு திக் விஜயம் செய்தாலும் மாட்டுக்கொட்டகை, பள்ளிக்கூடம், திறந்தவெளியில் கொட்டகை போட்டு தீர்த்தக்கரையில் இருப்பார். நாங்களும் ஸ்ரீ மகாபெரியவா இருக்கும் இடம் காடோ, மேடோ, முள் நிறைந்த இடமோ ஸ்ரீ மகாபெரியவா காப்பாற்றுவா என்று தங்கிவிடுவோம். அங்கேயே தூங்குவோம். ஸ்ரீ மகாபெரியவா எங்களுடன் இருக்கார் என்ற நிம்மதியில். இராமர் இருக்கும் இடம் அயோத்தி போல் எங்களுக்கு ஸ்ரீ மகாபெரியவா இருக்கும் இடம் அயோத்தி.

*****

கார்வேட்டு நகரத்தில் ஒரு மண்டபத்தில் தங்கி இருந்தோம் பூஜை முடிந்து ஸ்ரீ மகாபெரியவா மற்ற சிப்பந்திகளுடன் வெளியில் சென்று விட்டார். நான் எல்லா சாமான்களையும் பார்த்துக்கொண்டு இருந்தேன். அசதியில் கம்பளியால் போர்த்திக்கொண்டு தூங்கிவிட்டேன். யாரோ என்னை பலமாக அடித்தார்கள். ஆந்திராகாரர் அடி என்றால் கேட்க வேண்டுமா? நான் "பெரியவா பெரியவா" என்று கத்தினேன். என்னை அடித்தவர் நான் உங்களை திருடன் என்று எண்ணி அடித்துவிட்டேன். என்னை மன்னியுங்கள் என்று கூறி இதை ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொல்லவேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். நானும் காட்டிக்கொள்ளவில்லை.

*****

சென்னையில் அமாவாசை தர்ப்பணம் செய்து வைக்க ஸ்ரீ மகாபெரியவா போகச் சொன்னார். நான் மாட்டேன், என்னைப் பார்த்தால் ''ஏய் குடுமி, கொத்தமல்லி'' என்று கிண்டல் செய்கிறார்கள் என்றேன். ''நீ அப்படி யாராவது உன்னை கிண்டல் செய்தால் என்னை கூப்பிடு'' உன்னை கிண்டல் செய்தவனை யாராவது வந்து அடிப்பார்கள்'' என்றார். நான் அதே நம்பிக்கையில் சென்னை வந்தேன். அதே போல் ஒருவன் என்னை ரொம்பவும் கிண்டல் செய்தான். என்னால் அடிக்க முடியவில்லை. அழுதுகொண்டே ஸ்ரீ மகாபெரியவாளை நினைத்தேன். யாரோ ஒரு வழிப்போக்கன் என்னை கிண்டல் செய்தவனை அடித்து போடா அவரை ஒன்றும் செய்யாதே என்றுசொல்லி அவனை அனுப்பிவிட்டு என்னை நல்லபடியாக அனுப்பிவைத்தான். வந்தவன் ஸ்ரீ மகாபெரியவா தான் என்பதில் சந்தேகம் இல்லை.

*****

தஞ்சாவூரில் ''ஆறுபாதி'' என்ற ஊர் அதிருத்ரம் நடைபெற்றது. சரியான மழை. ஹோமம் செய்யும் இடங்கள் எல்லாம் தண்ணீரில் மூழ்கி விட்டன. வேதவிற்பன்னர்கள் ஸ்ரீ மகாபெரியவாளிடம் நீங்கள் ஜெபம் செய்து கொஞ்சம் மழையை நிறுத்தும்படி கேட்டுக்கொண்டார்கள். அதற்கு ஸ்ரீ மகாபெரியவா அதெல்லாம் வேண்டாம். கூரைமீது ஒரு தேங்காய் உடைத்து போடு என்றார். மழையும் நின்றது பூஜைகளும் நன்றாக நடந்தது. ஸ்ரீ மகாபெரியவாளுக்கு மழையை வரவழைக்கவும் தெரியும், கொஞ்சமாக நிறுத்தவும் தெரியும்.

ஸ்ரீ மகாபெரியவா ஞானி அன்றோ.

*****

# எனக்கு ஸ்ரீமகாபெரியவா முத்துமலை கொடுத்தார்

ஸ்ரீ மகாபெரியவா குளிக்கச்சென்றபோது முத்துமாலையை கழற்றி என்னிடம் கொடுத்தார். நான் அதை மேனாவில் வைத்துவிட்டேன். ஸ்ரீ மகாபெரியவா என்னிடம் "முத்துமாலை எங்கே?" என்று கேட்டார். நான் மேனாவில் இருக்கு என்று சொன்னேன். ஸ்ரீ மகாபெரியவா "அது உனக்குத்தான் கொடுத்தேன். எடுத்துக்கோ" என்றார். நான் எடுத்துக்கொண்டேன். மற்றவர்கள் நான் முத்துமாலையை திருடிவிட்டதாக சொன்னார்கள். நான் அழுதுகொண்டே ஸ்ரீ மகாபெரியவாளிடம் சொன்னேன். "யாராவது வாழ்த்தினாளா?" என்று கேட்டார். திரு.எஸ்.ஆர்.கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் மட்டும் சந்தோஷப்பட்டார். ஸ்ரீ மகாபெரியவா "எல்லோரும் திட்டினாலும் ஒருத்தர் சந்தோஷப்பட்டது போதும்னு நிறைவா இரு" என்றார்.

*****

ஸ்ரீ மகாபெரியவா மெஹபூப் நகரில் இருந்தபோது ஸ்ரீ பாலபெரியவா ஸ்ரீ மகாபெரியவாளிடம் ஆசீர்வாதம் வாங்கவந்தார். ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா என்னை அடுத்த மடாதிபதியாக தேர்வு செய்து இருக்கார். என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள் என்று நமஸ்கரித்தார்கள்.

ஸ்ரீ மகாபெரியவா "ஓகோ நீ என் பேரனா" என்று கூறி ஆசி வழங்கினார்.

கர்னூலில் வியாசர்பூஜை சமயம் மூன்று பெரியவாளும் இருந்தார்கள். நான் செய்த பாக்கியம் வியாசர் பூஜையின் போது மும்மூர்த்திகளின் தரிசனம் கிடைத்தது. ஸ்ரீ மகாபெரியவா சொல்வார்கள் நான் சிவன், ஸ்ரீ ஜெயேந்திரபெரியவா விஷ்ணு, ஸ்ரீ பாலபெரியவா பிரம்மா" என்று. அங்கு வந்த எல்லா பக்தர்களும் செய்த பாக்கியம். ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா ஸ்ரீ மகாபெரியவாளை நமஸ்காரம் செய்ய வருவார்கள். ஸ்ரீ மகாபெரியவா தூங்கிக்கொண்டு

இருந்தால் "ஸ்ரீ ஜெயேந்திர பெரியவா என்னிடம் (வேதபுரி) நான் நமஸ்காரம் செய்ய வந்ததாக சொல்லு" என்பார்கள். ஸ்ரீ மகாபெரியவா எழுந்தவுடன் அவரிடம் விவரத்தை சொல்வேன். அதற்கு ஸ்ரீமகாபெரியவா "நீ போய் ஸ்ரீ ஜெயேந்திரபெரியவாளை பார். யாராவது அவருடன் பேசிக்கொண்டிருந்தால் வந்துவிடு" என்பார். ஸ்ரீ ஜெயேந்திர பெரியவாளுக்கு ஸ்ரீ மகாபெரியவா உபதேசம் செய்வார். "யாராவது உன்னிடம் ஏதாவது கேட்டால் உனக்கு சரியாக தெரியாவிட்டால் நாளை சொல்கிறேன் என்று சொல். என்னை கேட்டுவிட்டு சொல்" என்பார். ஒரு தந்தையாக, குருவாக.

*****

வியாசர்பூஜை கர்னூலில் முடிந்தபிறகு ஸ்ரீ பாலாபெரியவா ஸ்ரீ மகாபெரியவாளிடம் சென்னை வந்துவிடுமாறு கேட்டுக் கொண்டார். ஸ்ரீ மகாபெரியவாளும் ஒத்துக்கொண்டு நம் சென்னை மக்களை காப்பாற்ற காஞ்சிபுரத்திற்கு வந்துவிட்டார். ஸ்ரீ மகாபெரியவா ஸ்ரீ காமாட்சி அம்மன் பாதம் அடையும் வரை காஞ்சிபுரத்திலேயே இருந்தார். கடைசி ஒரு வருடமாக ஸ்ரீ மகாபெரியவா ரொம்பவும் கஷ்டப்பட்டார். நான் கவலைப்பட்டபோது மனிதனாக பிறந்துவிட்டால் எல்லாம் அனுபவிக்கனும். தாங்கனும் என்பார். சித்தி அடையும் முன் தன் காலை என் தொடைமீது வைத்துக்கொண்டார். இது நான் செய்த மகாபாக்கியம். இன்றும் என்னை தாயாக, தந்தையாக, தெய்வமாக, குருவாக காப்பாற்றி வருகிறார். இன்றும் நான் எங்கு சென்றால் யாராவது ரூபத்தில் வந்து எனக்கு துணையாக இருக்கிறார். என் உம்மாச்சி. என் அம்மா.

*****

# எனக்கு ஸ்ரீ மகாபெரியவா காட்டிய மருத்துவர்கள்

திருச்சியில் பல் டாக்டர்.சுப்பிரமணியன் இவரது பிள்ளை கல்யாணராமன்.

*****

டாக்டர்.முருகேசன் இவர் ஸ்ரீ மகாபெரியவாளிடம் கொண்ட பக்தி மிகப்பெரியது. வாரம் 3 அல்லது 4முறை விடியற்காலையில் ஸ்ரீ மகாபெரியவாளின் தரிசனத்திற்கு வருவார். இவர் நரம்பியல் டாக்டர். ஸ்ரீமகாபெரியவாளை தரிசனம் செய்ய வந்தால் ஒரு கூடை நிறைய பழங்கள் கொண்டுவருவார். ஸ்ரீ மகாபெரியவா அவரிடம் இப்படி நிறைய பழங்கள் வேண்டாம். இரண்டு பழம் போதும் நீ ஏழைகளுக்கும், என் பக்தர்களுக்கும் பணம் வாங்காமல் சிகிச்சை செய்கிறாய் என்று சொன்னார். இவருடைய கல்யாணத்திற்கு என்னையும், ப்ரதோஷ வெங்கட்ராமன் என்பவரையும் ஸ்ரீ மகாபெரியவா அனுப்பி வைத்தார்கள். இப்பொழுதும் எனக்கும் சில ஸ்ரீ மகாபெரியவா பக்தர்களுக்கும் காசு வாங்காமல் மருத்துவம் செய்கிறார். ஒரு சமயம் நான் ரோட்டில் சென்று கொண்டிருந்தபோது ஒரு கார் என் மீது மோதி நான் கீழே விழுந்துவிட்டேன். இரண்டு காலிலும் நல்ல அடி நான் கார் ஓட்டுனரை கேட்டுக் கொண்டதன் பேரில் என்னை டாக்டர் முருகேசனிடம் கூட்டிச் சென்றார். டாக்டர் முருகேசன் என் கால்களுக்கு வைத்தியம் பார்த்து அந்த கார் ஓட்டுனரிடம் இவரை பத்திரமாக வீட்டில் கொண்டுபோய் விடு உன் கார் நம்பர் என்னிடம் இருக்கு என்று சொல்லி வீட்டிற்கும் அனுப்பி வைத்தார்.

*****

கண் டாக்டர்.வெங்கட்ராகவன் அவர் மனைவி டாக்டர்.காயத்ரி. இவர்கள் மேற்கு மாம்பலத்தில் க்ளினிக் வைத்திருக்கிறார்கள். ஸ்ரீ மகாபெரியவாளிடம் பக்தி கொண்டவர்கள். எனக்கு இரண்டு கண் ஆப்பரேஷனையும் காசு வாங்காமல் செய்தார்கள். இன்றும் என்னிடம் காசு வாங்குவதில்லை.

*****

**என் உம்மாச்சி,**
**இராமராகி, கிருஷ்ணராகி, அம்பாளாகி, சிவனாகி நின்றான்.**

# முடிவுரை

இந்த நூலை எனக்கு எழுதவேண்டும் என்ற ஆவலை ஸ்ரீ மகாபெரியவா அவரது 118வது பிறந்தநாளின் போது நிறைவேற்றினார். நான் கூறுவதை அப்படியே எழுதுமாறு திருமதி.ரேவதிகுமாரை கேட்டுக் கொண்டதன் பேரில் அப்படியே எழுதியுள்ளார். என் மனதில் எப்போதெல்லாம் நினைவு வருகிறதோ அப்போது சொல்வேன். அதை அப்படியே எழுதியுள்ளார். இந்த நூல் ஒரு தொடர்போல் இல்லாமல் தனித்தனி சம்பவமாக இருக்கும். அதனால் ஏதாவது தவறு இருந்தால் மன்னிக்கவும்.

*** ஸ்ரீ மகாபெரியவா சரணம் ***

"ஹர ஹர சங்கர ஜெய ஜெய சங்கரா"

*****

இந்த கையடக்க நூலை வெளியிட

பல வகைகளில் உதவிய ஸ்ரீமகாபெரியவாளின்

பக்தர்களுக்கு எனது மனமார்ந்த நன்றிகள்.

– பிரம்மஸ்ரீ E.S.வேதபுரி சாஸ்திரிகள்.

# சத்குரு சரணம்

பல்லவி

அன்பின் உருவான ஆதிசங்கரா
அருள் ஞான பொருளான வேதசங்கரா....
கருணையின் உருவான காஞ்சி சங்கரா...
காமாட்சி பதம் பணியும் காமகோடி சங்கரா...

சரணம்

1. தாயாகி தந்தையாகி தத்துவ குருவாகி
கருவாகி உயிராகி காக்கும் நல் அருளாகி...
பொருளாகி நலமாகி பஞ்சத வடிவான சங்கரா...
புண்ணியா நின் அருள் நிலைத்திட அருள்
– தருவாய் அன்பின்

2. அத்வைத புகழ்தன்னை அவனியிலே நிறுத்த
அருந்துறவும் பூண்ட திருவடிவே...
ஆதிசங்கரரின் மறுவடிவாய் தோன்றி
ஆனந்த நிலைகண்ட குருவடிவே...
காமகோடியென காஞ்சியிலே தோன்றிய
கருணை கடலான மாமுனியே – உன்னை
காலமெல்லாம் போற்றிப் பணிந்திடவே
கருணா சாகரா வரமள்வாய் அன்பின்

ஜெயஜெய சங்கர ஹரஹர சங்கர...
ஸ்ரீ காஞ்சி காமகோடி சத்குரு ஸ்ரீ சந்திர
சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்
பாத கமலங்கள் சரணம் சரணம்

உ

ஸ்ரீராமஜெயம்

# ஸ்ரீ சந்திரசேகரேந்திர சத்குரு அட்க்ஷரப்பாமாலை

அன்பின் வடிவமான சங்கரன்
அத்வைத பேரொளி ஞான சங்கரன்
அம்மை அப்பனான அருங்குரு சங்கரன்
ஆனந்த குருவான காஞ்சி சங்கரன்
இம்மையும் மறுமையும் காக்கும் சங்கரன்
ஈசனோடு ஆடிடும் இணையடி சங்கரன்
உன்னத நிலைகொள் உத்தம சங்கரன்
ஊழ்வினை நீக்கிடும் ஊர்தவ சங்கரன்
எந்தனை ஆளும் எழில்மிகு சங்கரன்
ஏற்றமும் அருளிடும் ஏகாந்த சங்கரன்
ஐம்புலன் அடக்கியே ஆண்டிடும் சங்கரன்
ஒப்புயர்வில்லா ஒளிர்மிகு சங்கரன்
ஓதிடும் வேதத்தின் உட்பொருள் சங்கரன்
ஔவைபோல் அருள்மொழி உணர்த்தும் சங்கரன்
கண்ணின் இமைபோல் காக்கும் சங்கரன்
காந்தமாய் கவர்ந்தெனை ஈர்க்கும் சங்கரன்
கிள்ளை எனைஏற்று மகிழும் சங்கரன்
கீர்த்தனைகள் பாடி துதித்திடும் சங்கரன்
குறைகளை போக்கிடும் கொற்றவன் சங்கரன்
கூட்டின் மெய்ப்பொருள் உணர்த்தும் சங்கரன்
கேடில் விழிச்செல்வமாம் ஞானசங்கரன்
கைகொண்டு அணைத்தெனை காக்கும் சங்கரன்
கொன்றை மலர்தனை சூடும் சங்கரன்

கோபுர கலசமாய் திகழும் சங்கரன்
கௌதமர் போற்றிடும் கருணா சங்கரன்
சந்திர பிறைகொள் சுந்தர சங்கரன்
சாந்த சொரூபமாய் வாழும் சங்கரன்
சிறுமை மதியினை மாற்றும் சங்கரன்
சீலமும் ஞானமும் உணர்த்திடும் சங்கரன்
சுந்தரன் போற்றிடும் பித்தன் சங்கரன்
சூழ்ந்த இருளகற்றும் மாய சங்கரன்
செல்வமும் வளமையும் அருளும் சங்கரன்
சேர்ந்த மெய்பொருள் உணர்த்தும் சங்கரன்
சைவத்திருமுறை போற்றும் சங்கரன்
சொல்லும் பொருளும் காக்கும் சங்கரன்
சோர்விலா மனத்திடை வாழும் சங்கரன்
சௌந்தர்ய லகரியை அருளிய சங்கரன்
ஞமலியின் எந்தனை சேர்த்த சங்கரன்
ஞானத்தின் வடிவமான சத்குரு சங்கரன்
தத்துவ நெறிதனை அளிக்கும் சங்கரன்
தாயாய் பாசமும் பொழிந்திடும் சங்கரன்
திக்கெட்டும் புகழ்கொள் ஜகத்குரு சங்கரன்
தீஞ்சுவை அமுதென சொற்சுவை சங்கரன்
துன்ப இன்னல்கள் அகற்றும் சங்கரன்
தூயவர் மனத்தினில் அமர்ந்திடும் சங்கரன்
தென்திசை அமர்ந்திட்ட குருவடி சங்கரன்
தேனினும் இனிய நல்வாய்மொழி சங்கரன்
தொண்டர்தம் அன்பிலே மகிழும் சங்கரன்
தோடுடை செவியனாய் ஆடும் சங்கரன்
நடமாடும் தெய்வமாம் காஞ்சி சங்கரன்
நானிலத்தில் தர்மமதை காக்கும் சங்கரன்
நிறைமதி அழகென நிறைந்த சங்கரன்

நீக்கமற எங்கும் நிறைந்த சங்கரன்
நுண்ணுயிர் அனைத்தும் காக்கும் சங்கரன்
நூலறிவில் மெய்ஞான சங்கரன்
நெஞ்சமதில் வஞ்சகத்தை அகற்றும் சங்கரன்
நேசமும் காட்டும் தாய்மை சங்கரன்
நொடிப்பொழுதில் எமை காக்கும் சங்கரன்
நோய்நொடி தீர்க்கும் மருத்துவ சங்கரன்
ஜோதி வடிவமான ஜோதி சங்கரன்
பண்பினைக் காக்கும் பரமசிவ சங்கரன்
பாமரரை அறிஞ்ஞராய் மாற்றும் சங்கரன்
பிள்ளையின் மொழிகேட்டு மகிழ்ந்த சங்கரன்
புண்ணிய சீலனாய் வாழும் சங்கரன்
பூமியில் தர்மத்தை ஊன்றிய சங்கரன்
பெற்ற தாய்போல் நமை பேணும் சங்கரன்
பேரின்ப நிலைகாட்டும் மோட்க்ஷ சங்கரன்
பைங்கிளி அம்மையின் பால சங்கரன்
பொற்பதம் தூக்கியே ஆடும் சங்கரன்
போற்றிடும் பாமாலை ஏற்கும் சங்கரன்
மகிமை காட்டியே மகிழ்விக்கும் சங்கரன்
மரவுரிதரித்த மாமுனி சங்கரன்
மாந்தர் குறைதீர்க்கும் மங்கள சங்கரன்
மின்னிடும் ஒளிபோல் மேனிகொள் சங்கரன்
மீட்டிடும் வீணையின் நாத சங்கரன்
முப்பிறப்பு வினைதனை அகற்றும் சங்கரன்
மூன்றாம் பிறை அணி சூடும் சங்கரன்
மென்மையாய் அருள்மொழி விழையும் சங்கரன்
மேன்மைகொள் வாழ்வையே அளிக்கும் சங்கரன்
மைந்தனாய் எனைஏற்று மகிழும் சங்கரன்
மோகம் அழித்து மெய்ஞானம் கொள் சங்கரன்

உ

# ஸ்ரீ காமாக்ஷி பதிகம்

ஆதி முதல்வனே அருள் வடிவே அன்புருவே அகத்தின்
ஞானச்சுடர் ஒளியே ஐங்கரனே பணிகின்றேன்
அன்னை காமாஷி அருளமுதை கவி பாட
பண்ணெடுத்து அருள்வாயே பரம் பொருள் கணபதியே

செங்கமல நிறத்தாளை செம்பவள அணியாளை
செங்கரும்பு கரத்தாளை செம்மலர் பதத்தாளை
கொஞ்சும் கிளி கொண்டு குளிர்பிறை சூடினாளை
சிரம் தாழ்த்தி பணிந்தோர்க்கு சீர்பெரும் வாழ்வுறுமே

வாழ்வுதனில் வளமாகி வளம்பெரும் அருளாகி
கோள்களின் வடிவாகி குவலையம் காப்பவளே
மாதவம் புரிந்தாங்கே மாநகர் காஞ்சிதனில்
திருக்கோன்கரம் கொண்டவளே கொஞ்சும் மொழியினளே

மொழிகேட்க மழலைக்கு ஞானப் பாலுட்டி
அணிதனையே நிலவாக்கி அன்பர்தம் மொழிகாத்தாய்
மகிடனை வதம் காண மாங்காட்டில் தவம்கொண்டாய்
மைந்தன் எனை ஏற்க அன்னையே வேண்டினேனே

வேண்டினேன் நின்னருளன்றி வேறேதும் வேண்டிலேனே
விண்ணவரும் மண்ணவரும் வணங்கிடும் மாமுகிலே
நான்மறை வேதமும் நவின்றிடும் நவமணியே
நின் பொன்கழல் பிடித்தேனே காப்பது நின்கடனே



கடனே இதுவென்று பிறவிதனை கழிக்கின்றேன்
கனிவாய் எனைஏற்கும் காலமும் வாராதோ
கதியே நீயென்று பொற்பதம் பிடித்திட்டேன்
திருவுளமும் இறங்காதோ இமவான் மலைமகளே

மலைமகள் நின்புகழ் தனையே அலைமகளும் கலைமகளும்
மகிழும் காஞ்சியிலே மங்கலக் கோலம் கொண்டு
மண்ணுருவில் மகேசனை மகிழ்ந்து பூஜித்து
மணம் கொண்ட நாயகியே தவக்கொழுந்தே பாராயோ

பாராயோ கண் மலர்ந்தே கடும் வினைகள் நீங்கிடவே
கேளாயோ வேண்டுதலை பொன் தாடங்கச் செவியாலே
ஏகாம்பர நாதனுடன் நீக்கமற காட்சி தரும்
ஓம்கார ரூபிணியே துதி செய்தேன் நின் பொன்னடியே

அடிமுடி இல்லாதோன் அகத்துறை மென்னவளே
ஆதி சங்கரனின் அத்வைத பேரொளியே
காமகோடி என கச்சியம் பதி ஆளும்
ஸ்ரீசக்ரதாரிணியே பெரும் கருணா சாகரியே

சாகரமாம் பிறப்பதனில் சலிப்புடனே செயலிழந்தேன்
சுந்தரியே நின் கருணை காட்டிடவும் வாராயோ
சார்ந்திடும் அடியார்கள் சோர்வுரும் வேளையிலே
சங்கரியே என அழைக்க சடுதியில் அணைப்பாயே

அணைப்பால் முக்கண்ணன் இடம் சேர்ந்த உமையவளே
'மொடச்சூர்' தலம் ஆளும் கனக சுந்தரி காமாக்ஷியே
சிறுமதியில் வெங்கடேசன் பாடிய பாடலிதை
கனிவுடனே ஏற்றிடுவாய் பணிந்தேன் நின் பாதச் செங்கமலம்.

********

